# விதவா விவாக விளக்கம்

---

## விஷயக் குறிப்பு.



---

ஸ்ரீ

# விதவா விவாக விளக்கம்.

திரிசிரபுரம்

C. P. இராஜகோபால நாயுடு,

இயற்றியது.

"பொங்கும் மங்களம் எங்கும் தங்குக"

திரிசிரபுரம்

ஜனானுகூல அச்சுக்கூடம்.

—

1926.

# முகவுரை.

---

நமது நாட்டில் கணவனையிழந்த இளங்கைம்பெண்களது நிலைமை மிகவும் இரங்கத்தக்கது. மனைவியையிழந்த ஆண்மக்கள் மறுத்தும் மறுத்தும் இளம் மங்கையரை மணந்துகொள்ள விதியுண்டு என்கின்றனர். ஆண்மையற்ற கிழவர்களும் பருவமுறாச்சிறுமியர்களை வரிக்கின்றனர். இவரது மனைவாழ்க்கை எத்துணை இன்பந் தரும்! மங்கைப்பருவம் வருமுன்னே கணவனையிழந்தவரும், மங்கைப்பருவமுற்ற பின்னும் புணர்ச்சி யின்பம் நுகராரும், மக்கட்பேறெய்து முன்னே துணைவரை யிழந்தோரும், இன்பம் ஆரத்துய்க்கு முன்னே காதலரையிழந்தோரும் ஆகிய கைம்பெண்கள் படும் துயரத்தை எழுத ஏடுமடங்காது ; சொல்லியழ ஆயுட் காலமும் போதாது.

கைம்பெண்கள் மறுமணம் செய்துக்கொள்ளலாமென்று சுமிருதிகள் விதிக்கின்றன. மறுமணம் செய்துக்கொள்ள விரும்பாத கணவர்ப்பற்றுடைய பெண்கள், ஒழுக்கம்கெடாதிருப்பதற்கு பலவிதிகளும் ஏற்பட்டுள்ளன. இக்காலத்து, அவ்விதிகளை கைம்மைப்பெண்கள் எல்லோர்க்கும் வற்புறுத்தி ஏற்றமுயன்று நடத்துவதால், காம இன்பம் விழையும் கைம்பெண்கள், களவொழுக்கம் செய்து, கருவாய்த்துக் குழவிக்கொலை செய்து, பழிக்கும் பாவத்திற்கும் ஆளாகின்றனர். இந்நிலைமையை மாற்றுதற்கு முயலுதல், இக்காலத்து அறிவுடைப்பெறு மக்கட்கு இன்றியமையாக்கடப்பாடாகும். அது செய்தற்கு ஏற்ற சமயமும் இதுவே. அறிவுடையோர் இது செய்யாராயின் பழியும் கொலையும் மிஞ்சி, நம்நாடு சீர்

கேடடைந்து, உலகத்து நாகரீகப்பெருக்கமடைந்துள்ள பிறநாட்டாரால் இழிக்கப்பட்டு, கேடடையும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

நம்தமிழ் நாட்டிற்கு அறநூல் தந்த திருவள்ளுவனுர், கைம்மையர்க்குயாதும் ஒழுக்கம் கூறவில்லை. கைம்மைநிலைமையை அவர் ஒப்புக்கொண்டதாகத் தோன்றவில்லை. எனினும் பண்டைச்சங்க இலக்கியங்களுள் கணவனையிழந்தோர் செயல்களில் பலகாணலாகும். அவைகள் கணவனை இழந்து வாழவிரும்பாத அறக்கற்புடைய மடந்தையர் செயல்களையே கூறுகின்றன. புறநானூற்றில், பூதப்பாண்டியன் இறந்துபட, அவன் கோப்பெருந்தேவி இருந்துவாழ விருப்பமின்றி த்தீப்பாய்ந்து இறப்பவள் பின்வருமாறு கூறினுள்.

"பல் சான்றீரே பல் சான்றீரே
செல் கெனச் சொல்லா தொழிகெனவிலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே,
யணில் வரிக்கொடுங்காய் வாள்போழ்ந்திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடை யிடைக்கிடந்த கைபிழிபிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய்தட்ட
வேளை வெந்தை வல்சியாகப்
பரற் பெய்பள்ளிப்பாயின்று வதியு
முயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டீம
நுமக்கரி தாகுகதில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தெனவரும்பற
வள்ளிதழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே,"

இச்செய்யுளால் கணவனை இழந்து கைம்மை நோன்பு நோற்கும் பெண்டிர் நீரிட்ட சோற்றை எள்ளை அரைத்துப் புளிக்கூட்டி வேளையிலையுடனே அவித்த துவையலைத்தொட்டுக்கொண்டு உண்டு, படுக்கையின்பந் தேடாது வெறுந்தரையில் துயில் கொள்ளவேண்டும் என்பதுபோன்ற சிலவழக்கங்கள் பண்டைக்காலத்தேயுள்ளன வென்பது விளங்கும். அவ்வழக்கம் கைம்மை நோன்பு நோலாதவர்க்கு வேண்டா. அவரெல்லாம் மறுமணம்செய்தற்கே உரியர்என்று துணிந்து கொள்ளவேண்டும். இந்தவழக்கங்களை உலக இன்பம் விரும்பும் ஏனைக் கைம்பெண்களுக்கும் ஏற்றுதலினாலே, இத்துணைக்கொடுமைகள் உண்டாகக் காரணமாயிற்று. ஆதலின் மறுமணம் விரும்பும் பெண்கள் மறுமணம்செய்து கொள்வதே முறை.

மக்களுக்கு மணம் செய்வதற்கு ஏற்ற பருவத்தை பிற்காலத்து பெரியார்கள் கூறியுள்ளார்.

"மங்கைப்பருவத்துக் கன்னிதனை மைந்தன்தான்
சங்கையில் ஆண்டோரிருபான் சார்ந்ததன்மேல்—துங்க
மணமருவச் செய்பிலவர்வல்லராய் வாழ்வர்
குணமருவி மல்கும் குடி"

"மணமகள் மங்கைப்பருவமடைந்த வளாகவும், மண மகன் இருபதுயாண்டு நிறைந்தவனாகவும் இருத்தல் வேண்டும் அவர்களது இல்லறவாழ்க்கை இன்பவாழ்க்கையாகும்."

"மணவாளனை யிழந்த மாதர்பிறிதோர்
குணவாளனை நயத்தல் கொள்கை — மணநயவார்
பின்னை இறந்த கணவர் பெற நோற்றல்
தன்னை அறிதல் தலை."

ஊழ்வலியால் கணவனை யிழந்த பெண்கள்தம் தகுதிக்கேற்ற வேறுகணவர்களை மறுமணம் செய்து கொள்வ துமுறையாகும் என்றும், மறுமணம் விரும் பாத பெண்கள் மறுமையிலே தம்முடைய கணவரை அடைதற் பொருட்டுக் கைம்மைநோன்பு நோற்றல் முறைமையாகு மென்றும் கூறினர். பெண்மை நெறிவிளக்கநூலுடையார். ஆயினும் மனைவியை யிழ ந்த ஆண்மகளும் கணவனையிழந்த பெண்மகளும் காம இன்பம் நுகர்ந்து பழகினவராதலினாலே, அவ்வின்பம் நுகர்ந்தறியாத மங்கையையாவது இளைஞனையாவது மணஞ்செய்து கொள்ளல் முறையாகாது. ஏனெனில், அத்தன்மையான கூட்டுறவால், மெய்க்காதலும் அதுபற் றின இன்பநுகர்ச்சியும் இல்லையாம். மனைவியை யிழந்த வன் மெய்க்காதலின்றி, குடும்ப வசதியின் பொருட்டே வேறொரு பெண்ணை நாடுகிறான். அவ்வாறே கணவனை யிழந்தவளும் வேறொருகணவனை நாடுகிறாள். ஆதலினால் மனைவியையிழந்த ஆண்மக்களும் கணவனையிழந்த பெண் மக்களுமாகிய இருவகைக் கைம்மையர்களும் தம்முள் தாமே கலந்து மணம் செய்து கொள்ளுதல் அறவொழுக் கமாகும்.

இக்காலத்து அறங்கூறும் உரிமையையுடைய பெரி யோர், உலகம் எவ்வாறு போனாலென்ன என்று வாளா இராமல் இம்முயற்சியைக் கைக்கொள்ளவேண்டும்.

ஆன்ற கல்வியும், அடிப்பட்ட உலகானுபவமும், உலையாமுயற்சியும், ஆகிய பலவகை ஆற்றலுமுடைய நம துநண்பர், திருவாளர் C. P. இராஜகோபால நாயுடு அவர்கள், நம் நாட்டுக் கைம்பெண்களது துயரத்தைநீக்கி நல்வழிப்படுத்தற்கேற்ற பல முயற்சிகள் செய்து, அது

பற்றி ஆங்காங்கு தாம் செய்த சொற்பொழிவுகளை ஒருவாறு தொகுத்து சுருதி, யுக்தி, அனுபவமுறையால் பொருள் விளக்கமாகுமாறு எழுதி **விதவாவிவாக விளக்கம்** என்னும் பெயர்தந்து வெளிப்படுத்துமிச் சிறு நூல், நம்மவர்கள் எல்லாரது உள்ளத்தும் ஆழப்பதிந்து அவர்காட்டு கின்றவழியில் நன்றியறிதலோடு பின்தொடர்ந்து அவர் செய்யுப் முயற்சியில் அவரோடு ஒத்துழைத்து ஈடுபடச் செய்யுமென்று எம் உளமாற நம்புகின்றேம். நமது நண்பர் அவர்கள் தமிழ் உலகத்திற்குச் செய்யும் உதவிகடலினும் பெரிது. அவர்கள் முயற்சி விரைவில் பயன்படுமாறு எல்லாம் வல்ல கடவுளை இறைஞ்சுகின்றேம்.

**அ. சிவப்பிரகாசம்.**

சூசையப்பர் கல்லூரி,
திரிசிரபுரம்,
7—4—26.

தமிழ்த்தொண்டன்,

தலைமைத் தமிழ்ப்புலவன்,



# SOME OPINIONS.

## சில அபிப்பிராயங்கள்.

---

மதுரை திருவாளர் S. சோமசுந்தர பாரதியாரவர்கள்,
எம். ஏ. பி. எல். எழுதுவது:

**M. R. Ry. S. S Bharati Avl., M. A., B. L., High Court Vakil, Madura, writes:**

---

I just skipped through your Monograph to-day; and I assure you it interested me greatly.

The authoritative excerpts from classic authors on "Dharma" with your lucid and forceful exegesis, coupled along with your irrefutable logic and reinforced by transparent sincerety and zeal for the cause you have nobly espoused, render your book a very valuable contribution to enlighten the Tamil public on a matter that vitally affects their body—sociale. It supplies a long felt want and is sure to serve a good cause in Tamilaham.

Your style is as simple as it is direct; it is best suited to the propogandist aim of the book. It is sure to go home to every honest and truth seeking inquirer, and in the long run will achieve your object efficiently I wish the good book all the success it so richly deserves. and I wish you joy of your good work. May this book be but the harbinger of more of the kind from its earnest and enthusiastic author.

Wishing the cause a speedy triumph.

---

திருச்சி, சௌராஷ்டிர நகரபரிபாலன சபை அங்கத்தினரும் நேஷனல் காலேஜ் உதவி ஆசிரியருமான மகா-ள-ள-ஸ்ரீ ஜே. வெங்கடாஜலபதி செட்டியார் பி. ஏ. எல். டி. அவர்கள் எழுதுவது:

**M. R. Ry. J Venkatachalapathy Chettiar Avl., B. A., L. T., Assistant, National College, Trichinopoly, and Municipal Councillor, Trichinopoly, writes.**

---

I take much pleasure to write a line in support of the widow-remarriage which takes a new life in Trichinopoly under the guide of Mr. C, P. Rajagopal Naidu Garu a well experienced and venerable gentleman of this place. The subject was being recommended from social platforms since a decade or two ago, and it is now crystallising into action here and there. And Mr. Naidu Garu, is giving a good impetus to it by his propoganda work. Any sane view, will not disagree with the fact that the conjugal pleasures are absolutely necessary as food and drink for human beings. So, whatever holds good for man in this respect must also hold good for woman. If custom has obtained a course altogether different from this common-sense point of view, it is history that is responsible for it. The events of the Mahabaratha, were a turning point in the destinies of the Indian Nation in many respects. The innumerable deaths of men in the 18 days horrible fight, necessitated the abstinence of widows from the conjugal pleasures of a second marriage. Again the many evils that result from this abstinence, are quite patent even to an indifferent observer. All these are represented in detail in the brochure of Mr. Naidu Garu.

In the conferences of many communities including the Brahmans of the Aryan Culture, the re-marriage question of the widows has taken a prominent place. This

indicates that India is now on the line of the twentieth century civilisation of the world.

Many evils that may be supposed to arise, may be pointed out to deter the progress of this movement; but almost all of them may be met logically and psychologically as Mr. Naidu Garu has done, But I like to impress in the public that it is no license of Carnal pleasures that Mr. Naidu Garu is recommending, while on the contrary, he not only condemns them on the ground of their smacking animalism but also recommends the recourse in this system of widow remarriage as a necessary evil and the lesser evil of the two, So, the public will do well in adopting the system judiciously avoiding the scylla of adultery on the one hand and the charybdis of carnal pleasures of a remarriage on the other.

———

திருச்சி, பிஷப்ஹிபர் கல்லூரி ஆங்கிலப் புலவர் திருவாளர்
M. S. பூரணலிங்கம் பிள்ளை பி. ஏ. எல். டி. அவர்கள்
எழுதுவது.

**M. R. Ry. M. S. Pnrnalingam Pillai Avl, B. A., L. T., Professor of English, Bishop Heber College, Trichinopoly, writes.**

———

In vedic times, widows found widowers for their sweet partners and *vice versa* without much ado. When the Mahabarata war raged and wrought dreadful carnage legions of widows survived the war and had no men to marry them. As a measure of expediency, premium was paid to chaste or clean widowhood and promise was made Shastraically that pure widows could by their penance reach the Seventh Heaven. Thus widowhood became an institution, an inviolable one, though everybody admitted

and acknowledged that it was contrary to all nature and reason. If the laws of nature were inexorable in the case of widowers who promptly led virgins to the altar, how could they be otherwise, living, as they did in the world, of man and amidst the joys and delights of Humankind? Elopements, concubinage, forced abortions, infanticide and hydra-headed corruption came to be rampant and triumphant to the eternal agony, dishonour and shame of the custom-ridden parents and of the short-sighted kith and kin of the ill-fated daugters and sisters. Ages have rolled away and yet the thoughtless and selfish man has seldom dared to set at naught the tyrant custom and to do what is right to the frail sister-hood. What Vidyasagar did to bereaved wives in North India, Virasalingam was able to accomplish for their sisters in the Andhra Province, but no stir seems to have been made to bring relief and comfort to the desolate hearts of the love-lorn in the Tamilland. The progress of Modern-culture and civilisation which have ransacked the Vedas and other sacred books and hit upon a host of texts in support of widow-marriages is slowly warming the frozen hearts and bosoms of the learned and the blissfully ignorant multitude and making it possible, nay inevitable, that the old order must change, yielding place to the new. An undaunted champion of the luckless lasses like Mr. C. P. Rajagopala Naidu, the President of the Naidu Sangam, who has, in his ripe old age of three score and ten, come out with a well written brochure on the subject, calculated to convince and persuade even the extremely Orthodox minds is indeed a *rara avis*. May many a dauntless Rajagopal arise and bring gladness to aggrieved hearts and disconsolate bosoms in the Tamil Country!

———

## திருச்சி ஸ்ரீமான் K. V. ஜெம்புநாத அய்யர் பி. எ. பி எல்., அவர்கள் எழுதியது.

## M. R. Ry. K. V. Jembunatha Aiyar Avl, B. A, B. L., Trichinopoly, writes.

---

The monumental work "The Vidhava Vivaha Vilakkam" by my esteemed friend Sriman C. P. Rajagopal Naidu Garu, is a verv valuable contribution to the Social Reform literature, as it is the first work of its kind, to my knowledge, in the Tamil language. It is a matter for deep regret that, while the other provinces in India, have made rapid strides in the direction of the Social uplift of destitute widows, the Tamil country alone, with all its boasted civilisation and advancement in Art, Literature and Politics, has lagged considerably behind, and the degradation to which it has sunk appears on the surface even to a superficial on-looker. The spirit of chivalry which animated the Indian Manhood of old is gone, and men have grown callous to the sufferings and miseries of even their own daughters and sisters, whom the fates have made miserable, by depriving them of their husbands. So long as India does not revive the true spirit of chivalry, whfch prompted the men of ancient India to go to the rescue of the weaker Sex fearless of consequences, and identify themselves with the cause of their suffering daughters and sisters, one may rest assured that India would continue to be a nation under bondage and its emancipation would be impossible of achievement. How can you expect Swaraj for your country, when you have not been able to achieve it in your own homes, and how can you think of making the country happy when you are helpless to carry comfort and solace to your own suffering daughters and sisters groaning under the most

unbearable of agonies, and writhing under torment even worse than those in Hell?

Surely our dear sisters and daughters, who are so suffering are not responsible for their unhappy lot as they are due to causes beyond their control. A Social custom which is partial to men and cruel to women has to be discarded with contempt, especially when the Shas-tras, equity, and good conscience dictate the obliteration of such a cruel custom. Man should show manliness in revolting against cruelty especially to women. Else he is no man, and Eve might well have cried "God save me from Adam" even at the time of the creation of the world, according to the Christian Theology. A man without a kind heart to the sufferings of women, is a blot in God's Creation, and one would rather wish for the great deluge to envelop the world, than have it populated by heartless unthinking men who bestow no kind thought on suffering womanhood.

Mating is a natural right conferred by God on all created beings, the difference between man and other lower orders of creation being that it is made to assume a legal form in the case of the former, while it is other-wise in the case of the latter. One may well recall in this connection the immortal lines of poet Cowper,

"Society, friendship and love
Divinely bestowed upon man,
Oh! had I the wings of a dove,
How soon would I taste you again",

The words Society, Friendship and Love are compre-hensive in their concept and mean a world of things.

Man cannot, therefore, deny to women the natural right he enjoys. An injunction against re-marriage of

widows who are willing to re-marry is, therefore, unnatural, being contrary to the laws of nature besides being intrinsically cruel, inhuman and unchivalrous. A country from which the spirit of chivalry has disappeared is doomed to everlasting perdition. Where is now the India of the olden days when Go-Rakshanam and Sthri-Rakshanam (Cow protection and protection of Women) were considered to be the most paramount of man's duties. The Hindu of to-day has failed to discharge the said two duties and hence his fall.

Unless and until the Indian wakes up to his duties to the woman-folk, the cry for Swaraj will continue to be a cry for the Moon, and there will be no salvation for the the country.

I have, therefore, great pleasure in commending this highly valuable and thought-provoking booklet to the kind attention of all my Indian brethren who have heads to think and hearts to feel,

---

திருச்சி செயின்டு ஜோசப்ஸ் காலேஜ் புரோபஸர் ஸ்ரீமான்
P. T. ஸ்ரீனிவாஸ அய்யங்கார் அவர்கள் M. A, L. T,
எழுதியது.

**M. R. Ry. P. T. Srinivas Iyengar Avl., M. A., L. T., Professor, St. Joseph's College, Trichinopoly, writes.**

---

It is a welcome sign of the times that Mr. C. P. Rajagopal Naidu after a life-long service of the Government appropriately crowned with a pension, should devote the evening of his life filled with ripe wisdom to the cause of the re-marriage of young Hindu widows, especially of

those belonging to the ancient community of warriors called Balijas. He has started a widows re-marriage association of which he is the head ; he has also written விதவாவிவாக விளக்கம், an essay on the re-marriage of widows discussed from the historical, the ethical and the practical points of view. I am glad of this opportunity of expressing my sympathy with the cause and of soliciting the help of the increasing number of those who wish that longstanding defects in Hindu Social arrangements may be remedied and the life of modern day Hindus be rendered happier and more useful than in the past.

---

## "THE SWADESAMITRAN"
## சுதேசமித்திரன்.

அக்ஷய-ஹூ வைகாசி-மீ 8உ வெள்ளிக்கிழமை (21-5-1926)

திருச்சி, ஜனானுகூல பிரஸ்ஸில் அச்சடிக்கப்பட்ட "வித்வா விவாகவிளக்கம்" என்னும் ஒரு சிறியபுஸ்தகம் நமது பார்வைக்கு அனுப்பப்பட்டது. அது 'திருச்சியிலிருக்கும் கைம்பெண்கள் புனர்விவாக சங்கத்தின் பிரசிடெண்டான, ஸ்ரீமான், ஸி.பி. ராஜகோபால் நாயுடுவால் பலவிடங்களில் நடத்திய சொற்பொழிவுகளின் தொகுதியென அறிகிறோம்.-இதில் அனுபவத்துக்கும் ஒத்து, சுருதி, ஸ்மிருதி புராணங்களின் தாத்பரியத்தை மேற்கோளாக் கொண்டு பல எதிர்புரைகளுக்கும் மறுப்புக் கூறப்பட்டு, இளங் கைம்பெண்களின் கதியைச் சீர்திருத்த ஆதாரங்கள் எடுத்துரைக்கப் பட்டுள்ளன.-ஸ்ரீமான் நாயுடுவினால் மேற்போட்டுக்கொண்டு நடத்தப்பட்ட காரியம் இன்புற நடக்குமாறு வேண்டுவோம்.

---



C. P. இராஜகோபால நாயுடு

# பதிப்புரை.

---

பஞ்சாப் தேசத்தைச் சேர்ந்த லாகூர் நகரத்தில் ஸ்தாபிக்கப் பெற்றுள்ள விதவா விவாக சகாய சபையார், அகில இந்திய மகா ஜனங்களுக்கு விடுத்துள்ள விஞ்ஞா பனத்தை ஆதரித்து, ப்ரக்ருதி தர்மம் ஒழுங்காய் நடை பெறவும், ஆண் பெண் பாலர்கள் பாவத்தை அணுகாம லிருக்கவும், சுருதி யுக்தி அநுபவத்துக்கு ஒத்ததுமான புநர் விவாகம் என்கிற மறு மணம் நடந்தபின்னரே, விதவா ஆண்மக்களாயினும் பெண்மக்களாயினும் ஒரு மித்து வாழ்தல் தகுதி என்றும், சாஸ்திர விரோதமான விபசாரங்களால், கர்ப்பமழித்தல் சிசுக்கொலை செய்தல் முதலிய தோஷங்களால் நிறைந்து நாளடைவில் க்ஷீணித் துக்கொண்டுபோகிற இத்தமிழ் நாட்டைப் புநிதமாக்கி, ஆதிநாகரிகத்தைநிலைநாட்டி, இத்தேசத்தை முன்னேற்ற மடையச் செய்தலே உசிதமெனத் தீர்மானித்து இத் திருச்சிராப்பள்ளி வாசிகளாகிய சில தேசாபிமானிகள் 1926-ம் ஆண்டு மேமாதம் 3-ம் தேதி இந்நகரில் ஒரு சபையை நாட்டினர்.

இச்சபையின் தலைவராய் ஆக்கப்பெற்ற அறுபத் தொன்பது ஆண்டுகள் நிறைந்தவரும், நீண்ட அநுபவம் வாய்ந்தவரும், திக்கற்ற அநாத விதவைப் பெண்மக்களின் ஆராத்துயரத்தை உள்ளபடி யறிந்த பெரியாருமாகிய C. P. இராஜகோபால நாயுடு அவர்கள், நீராயுருகிய மனதோடு இந்நகரின் அநேக இடங்களில், சுருதி, யுக்தி அநுபவங்களை யொத்து, தனித்துக் கேட்டவர்களுக்கும்

பெருங்கூட்டங்களிலும் உபந்நியசித்து வந்த விஷயங்களைக் கேட்டு ஆநந்த பரவசங்கொண்ட அனைவரும் இவ்வுபந்நியாஸத்தை அச்சிட்டு எங்கும் பரவச்செய்ய வேண்டுமென்று பேரவாவை வெளியிட்டதற்கிணங்கி, அவ்வுபந்நியாஸத்துக்கு "விதவா விவாக விளக்கம்" என்ற பெயரிட்டு அடியிற்குறிப்பிட்ட சபை பரிபாலக அங்கத்தினர்களாகிய நாங்கள் இச்சிறு நூலை வெளிப்படுத்தியிருக்கின்றோம். தேசாபிமானிகள் ஆதரிப்பீர்களென நம்புகின்றோம்.

பலவகுப்பினரும் இச்சபையில் அங்கத்தினராய்ச் சேர்ந்து விண்ணப்பத்தாளில் கையொப்பமிட்டிருக்கிறார்கள். இவர்களின், பெயரையும் அச்சிட்டுச் சீக்கிரத்தில் வெளிப்படுத்துவம்.

சபை அங்கத்தினர் ஒவ்வொருவருக்கு ஒரு புத்தகமும், பரிபாலகர்களுக்கு மூன்றுபுத்தகங்களும் கொடுக்கப்பெறும்.

இத்தமிழ் நாட்டில் நடைபெறும் பல வகுப்பினரின் சங்கத்தலைவர்கள் அல்லது காரியதரிசிகள் இச்சபைத் தலைவருக்கு எழுதினால் ஒரு புத்தகம் அச்சங்கத்தின் உபயோகத்தின்பொருட்டுக் கிரையமில்லாமல் அனுப்புவம். அவர்கள் அச்சபையினருக்குப்படித்துக் காட்டி ஒவ்வொரு அங்கத்தினரையும் புத்தகம் வாங்கிப் படிக்கச் செய்தும் தக்க ப்ரசாரங்கள் செய்து தம் வகுப்பாரில் புநர் விவாகம் நடைபெறுமாறு முயற்சிசெய்து நம் நாட்டைப் புநிதமாக்க முன் வருவார்களென்று நம்புகிறோம்.

மற்றெல்லோருக்கும் இப்புத்தகத்தின் கிரையம் அணா எட்டு. வேண்டுவோர் தற்காலம் சபையின் பிரசிடெண்டு, C. P. இராஜகோபால நாயுடு அவர்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

கைம்மயரின் சாஸ்திரோக்தமான புநர் விவாகத்தைப் பரவச் செய்தலும், ஸ்திரீகளுக்கு ஸ்திரீகளைக் கொண்டு பிரசாரம் செய்தலும் இச்சபையாரின் கொள்கையாகும்.

---

## நேரிசை அகவற்பா.

நிலமலி யுலகில் நாவலர் புகழும்
பலபல வாகும் பண்புயர் வளமெனுந்
தண்டுறை நதியுந் தக்கபன் மலையும்
மண்டுயர் கானமும் மலர்மிகு சோலையும்
வண்டுறை நெய்தலும் வளந்திகழ் மருதமுங்
கொண்டு விளங்குங் கொழுமைத் தாகி
எண்டிரு மகட்கோ ரியலரங் கெனவாய்த்
திண்டிறன், ஞானந் திகழ்பெருங் கல்வி
ஆன்ற வறிவுட னரும்பொருண் மலிவு
சான்றவர் கூறுஞ் சாய்விலா வொழுக்கம்
பொன்மணி யாடை புகழ்மிகு முண்டி
நன்னயக் கனிகள் நாடுநெல் கரும்பு
பற்பல் தானியம் பலப்பல வித்துடன்
அற்புத மலர்கள் அணிபல வுயிர்கள்
பாடும் பறவை பால்தரு பசுக்கள்
ஆடும் பறவை யமைநல விலங்கொடும்
ஏற்றமார் கரிகள் எழிலுறு பரிகள்

சாற்றப் பெருகிச் சவிபெற நிற்பது
நல்லநம் பரத நாடா கும்மால்
வல்லவ ரறிவர் வளம்பல வையுமே
உலகில் யாரும் உணக்கற் பதன்முனே
உலகில் யாரும் உடுத்துதன் முன்னே
உலகில் யாரும் உயரணி பூண்முனே
உலகில் யாரும் உணர்வுறு முன்னே
உலகில் யாரும் உவந்துகற் பதன்முனே
உலகில் யாரும் ஒருமுதற் கடவுளை
இலக வறிந்துள் இருத்து முன்னே
புலனுற வுண்டு புகழுற வுடுத்து
நலமிகு மணிப்பூ ணயம்பெற வணிந்து
குலவிய நன்றுங் கூறிடு தீமையுந்
தெரிய வுணர்ந்து திகழக் கற்று
விரிதரக் கடவுளை விளங்கக் கண்டு
யாரும் புகழும் யாணர் வாழ்வுடன்
தேரு மொழுக்கந் திக்கெலாம் போற்ற
வாழ்ந்தன ரிந்த வண்மைநாட் டவரே
சூழ்ந்த வினைகொலோ சொலுந்தே வதபோ
தாழ்ந்தன ரிந்நாள் தகைமையிற் குலைந்தே
ஆழ்ந்தனர் துன்பில் அந்தோ! அந்தோ!
வறுமையும் பெருமையை வற்றச் செய்தது
குறுமை யுற்றனர் கூறுநம் நாட்டவர்
காரணம் பகரிற் கலக மாகும்
ஆரணப் பொருளை யறிந்துண ராமையே
கற்புங் கடவு ளற்புங் கவினிய
விற்பன நாடுதான் வெறுவிதா யந்தோ
கூடா வொழுக்கமுங் குழந்தைக் கொலையும்
வாடா தோங்கி வளர்கின் றதுவே
இதன்கா ரணந்தா னியம்பிடிற் கைம்பெணார்

முதன்முதன் மணந்ததை முற்றத் தடுத்துக்
கட்டுப் படுத்திய கடுவஞ் சகமே
விட்ட திந்த விளைவினை யம்மா
பாரதப் போர்தான் பாரினில் வருமுன்
ஆரநற் கைம்மைய ரவாவிடிற் பின்னும்
மணமுடித் திருந்தார் மகவுடன் வாழ்ந்தார்
கணமிகு புகழான் காண்டீ வனுமே
நாக கன்னி நவிலொரு கைம்பெண்
மாகமின் னன்ன மாணெழி லுலூபியை
மணந்தன னின்னும் மாநளன் மனைவி
குணந்தனிற் சிறந்த குலத்த மயந்தி
இரண்டாஞ் சுயம்வர மியற்ற வெண்ணித்
திரண்ட புயமனர் செவியுறச் சுயம்வர
ஓலை போக்கிய வொருசொற் றுனும்
வேலைசூ ழுலகில் விதவை மணந்தான்
இருந்த துரைக்குமா லினிதினி னறிய
இன்னும்,
பெருந்தவக் குருகுலப் பெரும்பரம் பரையின்
சரிதம் படித்தார் சாற்றுவர் கைமையர்
உரிய வழியி னுலகுவப் புறவே
வந்தகான் முளைகளென் வாய்மை தனையே
இந்தமா நிலத்தே இறக்க மணமகன்
மன்ன மாதர் மணந்து கொண்டமைக்கும்
முன்ன மொருவன் முன்னிப் புணர்ந்து
விட்டே யகல விளங்கிழை யாளும்
நட்டே பின்னு நாயக னொருவனைக்
கொண்ட செயற்குங் கூறச் சான்றுதான்
எண்டரு புராணத் தினியகா வியத்துங்
கண்டனம் பற்பல் காதைக ளம்மா
விண்டவை கூறி விரிக்கிற் பெருகும்

புருடனை யிழந்த பூவையர் மணத்தல்
மருவு மெல்லா மாண்புயர் நாட்டினும்
நம்நா டதனிலும் நாடுசில் குடியினர்
தம்மா மனப்படி தணவாக் கைம்மையர்
பின்னொரு கணவனைப் பிழையறக் கொண்டு
மன்ன வாழ்வதும் மற்றுமுண் டாமல்
இன்ன 'வகையே எனெல் லோரும்
துன்னி மணந்து துயர நீங்கி
வாழ்தல் கூடா மனங்களிப் புறவே
தாழ்நெறி தன்னிற் றவறிடா தீங்கே.
பாரதப் போரிற் பகரா டவரெலாஞ்
சேரப் பொன்றிச் சென்றழிந் திடவே
விதவா விவாகமும் வியன்கடல் கடத்தலும்
இதமார் துறவு மிலாதொழிந் தனவால்
கன்னியர் பொருட்டாற் கழன்றன விவையே
மன்னிய மறையும் மருவு ஸ்மிருதியும்
கணவனை யிழந்த காரிகை மறுமணம்
குணமெனக் கூறிக் கொண்டுநின் றனவே
மணவாக் கைம்மையர் மற்றுங் கடுமை
தணவா நோன்பைத் தரிக்கவென் றனவே
நோன்பின் கடுமையை நோன்றுகொள் ளாதவர்
பான்மையிற் கட்டை பகர வேறிடச்
செப்பி யுளதாற் செய்தன ரதுவும்
ஒப்பிச் செய்தன ருத்தமர் சிலரே
மறுத்தனர் பலரே மனத்துறு பயத்தால்
வெறுத்தனர் விதியை வினையை நொந்தனர்

அதனால்,
மறுமணங் கொள்ள மகிழ்ந்துரைத் திட்டனர்
உறுதவ மேன்மை உயரரு ளோரே
மனைவியை யிழந்த மகன்மணந் திடலாற்

புனைகண வனைப்பிரி பூவையர் தாமும்
மணந்திடல் நீதி மாணற மாமால்
குணநிறை கடலாக் கூறிறை யோனும்
இதனை வெறுக்கா னிதமென வெணுமே
விதன நீக்க விழைவ தவலைகடன்
மனையை யிழந்த மதிமிகு முதியனும்
இனைதலுற் றப்பா லின்மணங் கொளுங்கால்
இளமை மகளி ரிருநில மதனில்
உளமுறக் கைமை யுறுவிர தங்கொளல்
எவனோ வியலு மீதற னாமோ
பவமுற வஞ்சகர் பகர்மொழி யலவோ
கைமையர் மணத்தல் கடிந்தன ரென்னல்
மெய்மனங் கொண்டே மிகப்பார்த் தருண்மோ
சருகுங் காற்றுஞ் சாப்பிட் டிருக்கும்
பெருகு தவத்தரும் பெண்விழைந் திட்டால்
அறுசுவை யுண்டி யடைவா யுண்போர்
வெறுத்து மணத்தை விதவையா நிற்பரோ
கருணைக் கடலாங் கடவுளெங் ஙனமோ
பெருகு துயருறப் பேதையர் தம்மை
மணமக னிறந்தான் மறுமணம் வேண்டாம்
நுணங்கிடை மகட்கென நுவலுவன் சொலுமே!
உணவு நித்திரை உளவரை போக
எணமிலா திருத்த லெவ்வண மியையும்
கட்டுப் படுத்தினாற் காரிகை யார்தாங்
கெட்டு வழியலாக் கேட்டு ணுழைவரே
ஈதுயிர்க் கெல்லா மியல்பா கிடுமே
வாதுசெய் வதுவும் வன்கண் மையதே
என்று கொண்டே இயல்பினா லியாரும்
துன்பகன் றின்பிற் றூநெறி நிற்க
மன்னிய கருணை மனத்தா லெண்ணி

வன்புகூ ருது வாய்மையே காட்டி
வேதமும் புராணமும் விதித்த வுண்மையை
ஏதமின் றெடுத்தே எவர்க்குங் காட்டி
கைமையர் மணத்தல் கடன்மையே யலாது
பொய்மை மொழியாற் புன்கண் ணுறுத்தலும்
கூடா வொழுக்கிற் கூடிச் சிசுக்கொலை
வாடா துஞற்றலும் வற்றிட வென்றே
கல்வியு மறிவுங் கவினுய ரொழுக்கமும்
நல்லருண் மனமும் நயம்பெறக் கொண்டோன்
ஆங்கில மொழிவலா னறநெறி யறிந்தோன்
ஓங்கிய வேத வுணர்வுமிக் குடையோன்
தெலுங்க மன்னர் திருக்குலத் துதித்தோன்
பலிஜ வாரெனும் பகர்குடி யாண்மையன்
நம்பெரு மானும் நாரண னுருறை
அம்பிற் கோயில் அரும்பணி செய்துமன்
இம்பரார் புகழ வினிது வாழ்ந்தோன்
உம்பர் போற்று முமைபவள் கேள்வன்
கோவில் முதல கோடா தியற்றி
நோவிலா நிலையில் நோக்க விருந்தோன்
பராவுமுத் யோகப் பண்பினி விருந்தோன்
இராஜகோ பாலனெனும் எழிற்பெய ராளன்
உலக முய்ய உயர்மொழித் தமிழால்
இலகுநல் லறிவோ ரினிதெனக் கூற
"விதவா விவாகமென்" வித்தக நூலை
இதமாக் கொள்ள வியற்றித் தந்தனன்
அன்னவன் குணமு மவனுயர் கருணையும்
மன்ன வாழி மாநில மிகவே.

சுபம்! சுபம்!! சுபம்!!!

தி. கி. ராஜகோபாலன்,
உரிமையாளன், ஜனானுகூல அச்சுக்கூடம்.

T. V போன்னுசாமி பிள்ளை,
பென்ஷன்ட் சப் இஞ்சினீர், திருச்சி.

K. திருமலைசாமி நாயுடு,
ஹெட் கிளார்க்கு, தந்தி ஆபீஸ், புத்தூர், திருச்சி.

பே. நாகரத்தினம் பிள்ளை, காசுக்கடை, திருச்சி.

S T முத்துகிருஷ்ணநாயுடு, ரிவின்யூ பென்ஷனர், திருச்சி

A. V. பாலகிருஷ்ண நாயுடு,
ஹெட் கிளார்க்கு, P. W. D. திருச்சி.

T, G. கோபால் பிள்ளை, யாதவர், வர்த்தகம், திருச்சி.

R வெங்கடேசபெருமாள் நாயுடு,
கண்டிராக்டர், உறையூர், திருச்சி.

C R ரெங்கராஜுலு நாயுடு, உபாத்தியாயர், மதுரை.

T V, நல்லசாமி பிள்ளை, B.A.
முனிசிபல் கவுன்சிலர், திருச்சி.

D R. கோவிந்தராஜுலு நாயுடு,
சானிடெரி இன்ஸ்பெக்டர், திருச்சி.

T L. K திருமலைசாமி நாயுடு,
ஆப்காரி கண்டிராக்டர், தி[illegible]சி.

T. V. வேதாச்சலம் பிள்ளை, B.A. B.L,
வக்கீல், தென்னூர், தி[illegible]சி.

T. R. சக்ரபாணி நாயுடு, ஆடிட் ஆபீஸ், S I.Ry. தி[illegible]சி.

T. N. இரங்கமன்னார் நாயுடு, டிராப்ட்ஸ்மென், திருச்சி.

மா. திருவேங்கடம் பிள்ளை, மளிகை வியாபாரம், திருச்சி.

இராய் சாயப், T. இராமாஞ்சுலு நாயுடு,
ரிடைர்டு அஸிஸ்டண்டு ஸர்ஜன், திருச்சி.

R M நாராயணசாமி நாயுடு,
காரநேஷன் ஸ்டால், பாலக்கரை, திருச்சி.

I C. ராகவலு நாயுடு, மிராஸ்தார், திருச்சி.

S A. K. கலியபெருமாள் நாயுடு,
உரிமையாளர், ஆஞ்சநேயர் வார்ப்படத் தொழிற்சாலை, திருச்சி

திருசிரபுரம் ஹானரேரி பெஞ்சுமாஜிஸ்திரேட்டும் டிஸ்திரிக்ட்டு
போர்டுக்கும் டவுன் பஞ்சாயத்துக் கோர்ட்டுக்கும்
மெம்பரும், திருச்சினுப்பள்ளி விஸ்வப்ராம்ஹ
மஹாஜன ஸெண்ட்ரால் சபையின் பிரதம
காரியதரிசியுமாகிய

திருவாளர் T. A. முத்துகிருஷ்ண ஆச்சாரியார்
அவர்கள் தந்த சாத்துக்கவி.

---

## அறுசீர் விருத்தம்.

இறையவன் அருளுக்கேற்கா இயல்பினுல் நீதி மாறி
முறையல விதவைமார்கள் முன்னுற மணத்தல் என்னும்
குறைமதி மொழியைப் போக்கிக் குவலயம் முற்றும் வாழ
நிறைகுண ராஜகோபால் நிகழ்த்தினன் நல்ல நூலே

கணவனை இழந்தமாதர் கைம்மைய ராகி நிற்க
மணமதை முடித்துவாழ மண்மிசை மொழிந்தார் முன்னேர்
பணவர வுலகிற் காணீர் பண்புற வாழ்வீரொன்றில்
எணமுற என்று கூறும் இராஜ கோபாலன் வாழி.

---

உ

திரிசிரபுரம் பலிஜவார்சபை அங்கத்தினரு ளொருவராகிய
ஜே. வீராசாமி நாயுடு அவர்களாற்
கொடுக்கப்பெற்ற சாற்றுக்கவிகள்.

---

## எழுசீர் கழி நெடிலாசிரிய விருத்தம்.

1. கடல் சூழ முப்புறங் கனகமால் வரைநிற்க
 கங்கை பல நதிகட் டாவ
வடலோடு புற்பூண்டு மரமாதி தானிய
 மளவற்ற செல்வமோங்க
வுடலாவி பேணுது நீதியுட னரசாண்ட
 வுத்தமப் பரதநாடு
கெடலான காலமிது காரணங் கண்டுவழி
 கேட்பீர்க ணிலைமையுறவே.

2. மூன்று யுகந் தன்னிலும் விதவைக்கு வேதனம்
முன்னோர்கள் கண்டதுண்டு
சான்றுபல கூறிடிலு லூபியைத் தனஞ்செயன்
றான் வேட்டலொன்ற தாகும்
பூன்றவிரைக் குழலியாந் தமயந்தி மறுமணம்
பூண்பறை சாற்றலேனோ
தோன்ற வருஞ் சுருதியி லிவ் வுண்மை சொல்லுபல
சாதியிலு மின்றுமுளவாம்.

3. பாரதப் போரினுன் மறுமணங் கடலேறற்
பகர்துறவு முதலதாக
நேரவகை கூடாது நிச்சயஞ் செய்தனர்
நீ ணிலந்தன்னி னம் போல்
வாரவரின் காமநோய் மாற்றவோ சிலகாலம்
வைத்ததடை தானு மலவோ
காரமொடு சுவையன்னங் கண்டபெண் வேட்கையின்
காமமதைக் கட்டவெளிதோ

4. பழையன நீக்கியும் புதியன கூட்டியும்
பண்பமர காலமோரா
வழகுமிக வாழ்வதே வாழ்க்கையா மற்றெலா
மறிவற்ற செய்கையாகும்
பழகிட வேண்டுமொரு நல்வழி பழகாது
படிலென்றும் பாவஞ்சாருங்
குழவிபோல் வலுவற்ற குணவதி கைம்பெண்ணின்
குறையை நீர் நீக்க வருவீர்.

5. நீடுபுக ழிந்தியா நிலையற்றுத் தடுமாறி
நிற்கின்ற நிலையை மாற்ற
கூடுபுக ழிந்திய ரிக்குறையை நீக்கிமுதற்
குவலயம் போற்ற நாளுஞ்
சூடுபுகழிஃதுதான் சுயராச்சியப் பேச்சையுஞ்
சுருக்காய் முடிக்க வகையாம்
நாடுபுகழ் வித்தியா சாகரர் வீரேசர்
நவின்றுபல மணமுஞ்செய்தார்

6. எண்ணமா ரிச்செயலை யிராசகோபாலனு
மேடிட்டுப் பாடுபட்டு

வண்ணமார் நூலொன்று வசனமாய்ச் சொற்றலொடு
வாழ்த்தியதை யூன்றி நீவிர்
திண்ணமாய்க் கையாள மூப்பினது சிரமத்தை
திரணமா யுதறிவிட்டு
கண்ணனு ரருள்வழி முன்வந்து நின்றனன்
கைகொடுத் துதவிசெய்வீர்

7. மெய்ஞ்ஞான நன்னடு மெலிவடைய பெண்கொலையுஞ்
சிசுகத்தி களவு முதலா
மஞ்ஞான மலியாமன் மண்பெருமை குலையாமன்
மனதொப்பி யாற்றி மொழியைத்
தஞ்ஞான நிலைகண்டு தக்கபடி தாரணியிற்
றன்னுரிமை பெற்று வாழ்க
வெஞ்ஞான்று மீசனருளுளதாகி செல்வ முத
லினிதோங்கி யேற்றமாமே.

---

திரிசிராபுரம் பிஷப்ஹீபர்காலேஜ் தமிழ் பண்டிதர்

## வித்துவான் அ. சுந்தரநாதம் பிள்ளை அவர்களால்

கொடுக்கப்பெற்ற சாற்றுக்கவிகள்.

---

1. காணரு வேத மாதி கவின்திருநூலும் யுக்தி
மாணமை வழக்கு நாடி மாசறத் தெளியக் காட்டித்
தோணரு கருணையாலே தோன்றுநன்னூலைச் செய்தான்
ஏணமை குணத்தா னெங்கள் இராஜ கோபால மாலே.

2. கற்றநல் ராஜகோபால் காசினி மெச்சும் வாக்கின்
சொற்ற நல் வித்தை யாளன் சோர்விலா பத்தி மிக்கான்
குற்றமில் குணத்தான் தந்த கோதறு நூலின்பேர்தான்
விற்றரு விதவா விவாக விளக்க மென்றிசைப்பர் மாதோ

3. பிறைநுதற் கைம்மை மாதர் பெருங்கவல் துயர மெல்லாம்
இறையுமிங்கில்லாதோட வியைபினை நாடி வேதத்
துறை நெறி கடவா தின்பிற் சொற்றிடு மிந்த நூல்தான்
இறையருள் பெற்று வாழி! யிருநிலந் தழைக்கத்தானே.

# ஆய்வுரை.

"விதவா விவாக விளக்கம்" என்னும் சிறுநூலை திருச்சி நண்பர் C.P. இராஜகோபால்நாயுடு அவர்கள் அனுப்பக் கைவரப் பெற்று அதனைப்படித்துப் பார்த்தேன்.

விதவா விவாக சபையின் உபசபை ஒன்று தென்னாட்டில் இல்லையே என்று நான் நினைத்த காலமும் உண்டு. அது நண்பர் இராஜகோபால்நாயுடுவால் திருச்சியில் கைகூடப்பெற்றதை நோக்க நன்மகிழ்ந்தேன்.

நம் நாட்டில் உள்ளோர் சாத்திர பலமற்ற ஓர் துர் ஆசாரத்தை மேற்கொண்டு இளம் கைம்பெண்களை அநேகவித சங்கடங்களுக்கு உட்படுத்தி வருகிறார்கள். இத்துர்வழக்கம் என்று ஒழியுமோ அன்றுதான் நாடு சுகப்படும்.

'உலகில் ஆடவருக்கு எவ்வளவு சுதந்திரம் உண்டோ அவ்வளவு சுதந்திரம் மடவாருக்கும் உண்டு' என்பதை ஆண்மக்கள் மறந்துவிட்டார்கள். இம்மறதி என்னும் பகைவன் ஈன்ற குழவியே மேற்சொன்ன துர்வழக்கம் என்னலாம்.

ஆரியர் தமிழ்நாடு புகுவதன் முன்னம் இந்நாட்டில் மக்களுள் களவு, கற்பு என்னும் இருவித முறைகளே நடைபெற்று வந்தன.

ஆகையாலேதான் ஆசிரியர் திருவள்ளுவனாரும் இவ்விருவித முறைகளையே கிளந்தெடுத்தோதியுள்ளார். இம்முறைகள் இரண்டுமாத்திரம் ஒரு நாட்டினிடத்து நடைபெற்று வந்தால் பெரும்பாலும் அந்நாட்டில் கைம்பெண்களே இருப்பது அரிது.

பண்டைக் காலத்தே தமிழகத்தில் வாழ்ந்த நன்மக்கள் தலைவன் தலைவியாது உள்ள ஒற்றுமையால் எற்பட்ட மனைவாழ்க்கையினையே சிறந்ததெனக் கொண்டாரென்பது அகப்பொருள் நூல்களால் இனிது விளங்கும்.

ஓர் பொழிலகத்தேயாதல் அல்லது பிற எவ்விடத்தேயாதல் தலைவன் தலைவி என்பார்க்கு காட்சி முதலியன நிகழ்ந்து அன்னோரது குறிப்பறிவு முற்றுப்பெற வேண்டுமென்பதே அகப்பொருள் இலக்கணத்திலும் அதன் வழித்தாய் இலக்கியங்களிலும் நன்கு நாட்டப் பெற்றிருக்கின்றது.

பல பிறவிகளிலும் ஒத்த அன்பினராய் இல்வாழ்க்கை நடத்திய இரண்டு உயிர்கள் இப்பிறப்பிலே ஆணும் பெண்ணுமாக ஒருவரை யொருவர் தலைப்பட்ட ஞான்று அன்னோரது உழுவலன்பு வெளிப்பட்டு அவ்விருவரையும் ஒற்றுமைப் படுத்தும்.

இந்நிகழ்ச்சிகள் உண்டாவதற்கு தலைவன் தலைவியருக்கு வயது வந்தே இருக்கவேண்டும். வயதுவராச்சிறுமக்களிடை இவ்வித உணர்ச்சிகள் உண்டாகா. ஆகையால் இக்காலத்தில் நடைபெறும் குழந்தை மண முடிப்பு அக்காலத்தில் இல்லையென்பது போதரும்.

இவ்வாறு ஒத்த அன்பினராய் தலைவனும் தலைவியும் களவு முறையாற் பிணிக்கப்பட்டு கற்பு முறையில் இல்லறம் நடத்தினால் அவர்களுக்கு எவ்விதத்திலும் குறைவு ஏற்படாது. கவலை என்பது ஒன்று இல்லாராய் வாழ்ந்திருப்பர். அதனால் அவர்களுக்கு ஆயுளும் நீடிக்கும்.

புறநானூற்றில் கூறிய பிசிராந்தையார் இதற்குச்சான்றுபகர்வர்.

கற்புடைய மாதர் கைம்பெண்களாகவே மாட்டார்கள்.
"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்றபடி கற்புடை மகளிர் தமதிட்டப்படி மழையைப் பெய்விக்க வல்லவர்கள். ஆதலால் சாவித்திரி மாதிரி தம்கணவர்களையும் உய்விக்க வல்லவர்களே.

கற்புமுறை இத்தமிழ்நாடு ஒன்றற்கே சிறப்புடையது.

ஆகையால் அக்காலத்தில் இளங்கைம்பெண்களைப்பற்றிக்கவலையே இல்லாமல் இருந்தது. ஆகையால் திருவள்ளுவர் முதலான நீதி நூற்காரரும் கைம்மையர்க்கு ஒழுக்கம் கூறுமற்போயினர்

ஆரியர்கள் தமிழ்நாடு புகுந்த பின்னர் ஆரியர்கள் தங்களுடைய எண்வித மண முறையைத் தமிழ்மக்களிடையில் புகுத்தி விட்டார்கள்

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப தொல்காப்பியம்.

இப்பொழுது தமிழர்க்குள் நடைபெறும் மணமுறை பண்டைச் சிறப்பு முறையைத் தழுவியதல்ல. இப்பொழுது நடைபெறுவதெல்லாம் ஆரியர் மணமுறையைத் தழுவியன. ஆகையாற்றான் இக்காலத்தில் இளங்கைம் பெண்களை ஏராளமாய்க் காண்கிறோம்.

இவ்விளங் கைம்பெண்களை நல்வாழ்க்கைப் படுத்துதற்கு இவ்வித விதவா விவாகசங்கம் இன்றியமையாததே.

களவு முறையில் இருவரது மனமும் ஒத்த பிற்பாடு மணமகனுக்கு ஏதாவதொரு தீங்கு ஊழ்வலியால் ஏற்பட்டு விட்டால் மணமகள் வேறொருவனை நாடாள். கைம்மை நோன்பு நோற்றே காலத்தைக் கழிப்பாள். ஏனென்றால் இயற்கையாக ஒருவனிடத்தே சென்ற அன்பானது மறுபடியும் இன்னொருவனிடம் செல்லாது. இதற்குத் திருநாவுக்கரசு சுவாமிகளுடைய தமக்கையார் திலகவதியாரே சான்று.

ஆடவர்க்குள் பிரமசாரியம், கிரகஸ்தாசிரமம்—வானப்பிரஸ்தம்—சந்நியாசம் என நான்கு நிலைகள் உள்ளன போலவே மடவார்க்குள்ளும் நான்கு நிலைகள் உள்ளன :—

1. மடவார் கன்னிமாடத்தில் இருக்கும் வரை— பிரமசாரியம்—அதாவது கன்னிமாட வாழ்வு.

2. களவு முறையில் மணமகனை வரித்து கற்பு முறையில் இல்லறம் நடத்துவது_கிரகஸ்தாசிரமம்_அதாவது இல்லறவாழ்வு.

3. கணவனோடு வனம்புக்கு கணவன் தவமியற்றுங்கால் தான் அவனுக்குத் தொண்டு செய்வது—வானப்பிரஸ்தம்—அதாவது வனவாசம்.

4. ஊழ்வலியால் கணவன் இறக்க நேரில் மனைவி உலகை வெறுத்து கைம்மை நோன்பு நோற்பது—சந்நியாசம்.

கைம்மை நோன்பாவது :—

1. உப்பில்லாத கூழ் அருந்துதல்
2. பாயில்லாமல் வெறுந்தரையில் படுப்பது
3. வெற்றிலை பாக்குப் போடாமல் இருப்பது
4. வெள்ளை அல்லது துவராடையைத் தவிர வேறு நிற ஆடைகளைக் கட்டாமல் இருப்பது.
5. அணிகலன்கள் அணியாமல் இருப்பது.
6. மஞ்சள் பூசாமல் குளிப்பது.
7. குங்குமப் பொட்டிடாமல் இருப்பது
8. பூக்களை அணியாமல் இருப்பது.
9. தேவகோட்டத்தில் தொண்டு செய்திருப்பது முதலியன.

முக்கியமாக போகத்தை விளைவிக்கும் பொருள்களை வெறுத்து இருப்பது.

சந்நியாசிகளில் அநேகர் மொட்டை அடிக்கவும் அநேகர் மயிர் (சடை) வளர்க்கவும் இருப்பதுபோல கைம்பெண்களில் அநேகர் மொட்டை அடிக்கவும் அநேகர் மயிர் வளர்க்கவும் செய்கிறார்கள்.

ஆகையால் கைம்மை நோன்புக்கும் சந்நியாசத்துக்கும் யாதொரு வித்தியாசம் இல்லை.

இவ்விதம் உலகை உண்மையில் வெறுத்த கைம்மை நோன்பாகிய சந்நியாசத்தைக் கைக்கொண்ட கைம் பெண்களுக்கு மறுவிவாகம் வேண்டியதில்லை.

அப்படி இல்லாமல் தற்கால ஆரிய மண முறைப்படி விவாகம் செய்யப்பட்டு இளமையிலேயே கைம்பெண்களாகும் சிறுமகளிர்க்கு மறுவிவாகம் அவசியமே.

ஆகையால் நம் நாட்டில் உள்ளோர் எல்லோரும் இச்சங்கத்தில் அங்கத்தினராயமர்ந்து சங்கத்தின் நோக்கங்களை முற்றுவிப்பார்களென நம்புகிறேன்.

அரூர்
22—5—26. } துடிசைகிழார் அ. சிதம்பரனார்.

ஓம்.

# விதவா விவாக விளக்கம்.

---

“எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் மற்றொன் றறியேன் பராபரமே.” (தாயுமானவர்)

---

அகிலாண்டங்களை யெல்லாம் தன்னருள் வெளிக்குள் தங்கும்படி இச்சைவைத்து இரக்ஷித்துவரும் சர்வேசுரன், இரக்கமுள்ளவரென்றும், பரமதயை யுள்ளவரென்றும், கருணையுள்ளவரென்றும், தர்மமே வடிவு கொண்டவரென்றம், அவர்படைத்த எல்லா ஜீவகோடி இராசிகளும் எக்காலத்தும் சுகத்தை அனுபவிப்பதே அவருடைய இச்சையென்றும், எல்லாத் தேசத்தினராலும், மதஸ்தர்களாலும், கக்ஷிபேதமில்லாமல் நிராக்ஷேபணையாய் ஒப்புக்கொள்ளப்பட்ட பரம சித்தாந்தமாகும். அஞ்ஞானத்தாலும், சிரத்தையற்ற நடவடிக்கையாலும், தர்மங்களை மீறிநடப்பதாலும், பிறருடைய அக்கிரமச் செயல்களாலும், துக்கங்கள் சம்பவிக்கும். கருணாகரனாகிய ஈசுவரனால் வெளியிடப்பட்ட சாஸ்திரமானது பிரஜைகளுடைய சுககரமாயிருக்குமே யொழிய, பிரதிகூலமா யிருக்கலாகாதென்றும், இதற்கு விரோதமாய்ப் போதிப்பவர்கள் வஞ்சகரென்றும், தெய்வதூஷணை செய்யப்பட்டவரென்றும், நன்றாய் அறிந்துகொள்ளத்தக்கது. வெகு ஜனங்களுடையசுகத்தை அனுசரித்துச்செய்வதே புண்ணிய காரிடமாகும், அல்லாதது பாப காரியமாகும்:

పరోపకారః పుణ్యాయ। పాపాయ పరపీడనమ్॥

“பரோபகார: புண்யாய பாபாய பரபீடனம்.”

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால், எந்த சாஸ்திரத்தை யுண்டாக்கினாலும், எந்ததர்மத்தை நிர்ணயித்தாலும், எம்மதத்தைஸ்தாபிக்க முயன்றாலும், அக்காரியம் வெகு ஜனங்களுடைய சுககர மாயிருக்க வேணுமேயொழிய ஒரு கூட்டத்தாருக்கு மட்டும் அனுகூலமாயிருக்குமாகில், அது பகவானுடைய இஷ்டத்தைப் பொறுத்ததல்லவென்றும், கொடுமையான பேய்பிசாசுகளை யொத்தவர்களின் செயலென்றும் நம்ப லாம். தங்களுடைய கர்ப்பத்தில் பிறந்த ஸ்திரீகளையும், சிசுக்களையும் இரக்கமற்று வதைக்கும் கிராதககாரியம் அஞ்ஞானத்தாலல்லவா? சத்தியமான ஈசுவரனை மறந்து காளியென்றும், சத்தியென்றும், பேரிட்ட கற்சிலைகளுக் குச் சந்தோஷமுண்டாகுமென்று தயையை மறந்து நம் முன்னோர் நரபலி கொடுத்துவந்தது கோரமான இராக்ஷ தச்செயலல்லவா? புண்ணியம் வருமென்றும் பாபம் கழியு மென்றும் பிரமையடைந்து. இரக்கமின்றிப் பிரியசம்மந் தத்தை மறந்து, தங்கள் வயிற்றிற்பிறந்த சிசுக்களைக் கங் காநதியில் முதலைகளுக்கு இரையாக ஆற்றில் எறிந்து விட்டதும் இக்காலத்தும் இரகச்யமாய் எறிந்து வருவது மான ஆசாரம் புண்ணியச் செயலாகுமா? முன்னோர் அநுஷ்டித்துவந்ததாகச்சொல்லும் இவ்வழக்கத்தை இப் போது நாம் வெறுக்கிறோமல்லவா? இப்படிச் செய்வது வழக்கம் அல்லது ஆசாரமென்று சொல்லப் படுகிற பிசாசின் பெருமையினாலல்லவா? ஒருவரைப் பார்த்து உங்கள் பால விதவைப் பெண்ணுக்கு மறுவிவாகம் செய்து வைத்து அப்பெண்மணியின் துயரத்தை மாற் றக்கூடாதா என்று கேட்டால், ஐயா நம்மவர்களுக்குள் இவ்வழக்க மில்லையே இது நாம் அநுஷ்டித்துவரும் ஆசாரமல்லவே என்று பொறுப்பற்றுச் சொல்லி விடு கிறார்களே; நம்முடைய கருணைக்கும் தயைக்கும் உரித்

தான பால விதவைகள், வாழ்நாள் பரியந்தம் 'கான்படு கண்ணியில் மான்படுமாறு கலங்கும்' துயரத்தையும் கஷ்டத்தையும் பார்த்து மனம் இளகாமலிருத்தல் அந்த ஆசாரமென்கிற பிசாசின் காரியமேயல்லவா? இந்த அநாதவிதவைகள் படும் துயரத்தைப் போக்குவதற்குப் புண்ணியவான்கள் செய்யும் பரோபகார முயற்சிகளுக்கு இடையூறுகள் செய்து எடுத்த காரியம் ஈடேறவொட்டாமல் செய்வதும் அந்த ஆசார பிசாசத்தின் ஆவேச வலுவாலே யல்லவா? ஏ கொடிய ஆசார பிசாசமே! எல்லாத் தேசங்களுக்கும் சிரோமணியாய், எல்லா தேசத்தோர்களும் கவுரவித்து வந்த இந்த இந்துதேசத்தில் மட்டும் நீ பிரவேசித்து ஈசுவரனது அதிகாரத்தை ஆக்கிரமித்துக் கொண்டு இத்தேசத்தில் பிறந்த எங்கள் சகோதரிகள், பிள்ளைகள், பேத்திகள், விதவைகளான நாள்முதல் நீ உன்னுடைய எல்லையற்ற அக்கிரம அதிகாரத்தைச்செலுத்துகிறாய். இவ்வுலகத்திலுள்ள எல்லாத் தேசங்களுக்கும் முடிநாயகமாய் விளங்கிய இத்தேசத்தைப் பார்த்து மற்ற தேசத்தார் இந்துக்கள் கௌரவமற்றவர்க ளென்றும், தயையற்றவர்க ளென்றும், தங்களுடன் பிறந்த சகோதரிகள், தாம் பெற்ற பெண் பிள்ளைகளின்மீதே கொஞ்சமேனும் இரக்கமற்ற கொடிய பாவிகளென்றும், நாகரிகமற்றவர்களென்றும், எவருமறியச்சொல்லு கிறார்களே. நீ எங்கள் தேசத்தை அடைந்த பின்னரல்லவா எது செய்யத்தக்கது எது செய்யத்தகாதது என்கிற விவேகத்தை எங்கள் இருதயத்திலிருந்துந் துரத்திவிட்டாய்! ஆத்மகுணங்களிற் சிறந்ததாகிய தயை என்கிற தர்மத்தை அவர்கள் மனதைவிட்டுத்துரத்திவிட்டாய்! உன் அதிகாரம் பெருகிய பிந்தியல்லவா எல்லா தேசத்தினராலும் புகழ்படைத்த இந்தப் பரத கண்டம்

நாளடைவில் கர்ப்பமழித்தல் சிசுகத்தி முதலிய பாவங்களால் ஈனதசையை யடைந்து இப்போது இதரதேசத்தார் பார்த்து நகைக்கும் நிலமைக்கும் வந்துவிட்டது!

ஆகையால், சகோதரர்களே! சகோதரிகளே! நீங்கள் இனியாவது அறிவுற்று (ஆசாரமென்கிற) அஞ்ஞான நித்திரையிலிருந்து விழித்துக்கொண்டு நம்மைப்படைத்த ஈசுவரனது கட்டளையாகிய வேதவிதியின்படி நடந்து அவரது அதிகாரத்தையும் அவருடைய சிங்காசனத்தையும் களவாடி ஆசாரமென்கிற பெயரிட்டுக் கொண்டு நம்மை ஆளும்படியான இந்தப்பிசாசத்தின் அடிமைக்கு நாம் ஆளாகாமல் மற்ற தேசத்தாருடைய மதிப்பை நாமடைந்து நமது ஆதி நாகரிகத்தை நிலை நாட்ட வேண்டும்.

மானிடராகிய நாம் மிருகங்களைப்போல் ஞானமற்றவர்களல்ல. எது சத்தியம், எது அசத்திய மென்று தெரிந்து கொள்வதற்கும், அவரை ஆராதித்து மோக்ஷ வீடடைவதற்கும், புண்ணிய பாவங்களை அறிந்து கொள்வதற்கும், எது அனுகூலமானது? எது பிரதிகூலமானது? என்று தீர்மானித்துக்கொள்வதற்கும் கடவுள் ஞானமென்கிற பிரகாசமான தீபத்தை நமக்குக் கொடுத்திருக்கிறார். அஞ்ஞானத்தால் மிருகங்கள் ஒரே சுபாவத்தை யடைந்து எப்போதும் இருக்குமேயொழிய. ஞானத்தோடு கூடிய மானிடர் தங்களுக்கு ஈசுவரன் அநுக்கிரகித்திருக்கும் ஞானசுதந்திர பலத்தால் மாறுதலடையாமல் எக்காலத்திலும் ஸ்திரமாய், ஒரே ஸ்வபாவத்தை யுடையவர்களாயிருக்க முடியாது. உலகத்தில் நமக்கெவ்வளவுக் கெவ்வளவு வித்தையும், புத்தியும் அநுபவமும் விர்த்தியடையுமோ அவ்வளவுக்கவ்வளவு, அவ்வக்

காலத்து மாறுதல்கள் அடைவதும், அப்பேர்ப்பட்ட மாறுதல்கள் தேசத்தின் சௌகரியத்துக்கு அநுகூலமாயிருந்தால் அது பகவானுடைய திருவுள்ளத்துக்கு உவப்பானதாகவுமே இருக்கும். அதுவே அவரது திருவுள்ளக் கருத்தாகும். ஆயினும் விஷய விசாரம் செய்யாமல் கிரமமான மாறுபாடுகள் செய்ய முடியாதாகையால், இது பழைய ஆசாரமா அல்லவாவென்கிற பொறுப்பற்ற விசாரணையை விட்டுவிட்டு இதனல் லாபமுண்டாகுமா நஷ்டமுண்டாகுமா, தற்கால நிலைமைக்கு அநுகூலமானதா பிரதிகூலமானதா என்ற (விஷய) விசாரணை செய்து, நல்ல பயனேற்படக்கூடிய ஏற்பாடுகளை நாம் செய்து கொண்டே போகவேண்டும். தொன்றுதொட்டு வழங்கி வந்த ஆசாரமாகிலும் மானிட சுபாவத்துக்கும், இயற்கைத் தர்மத்துக்கும் விரோதப்பட்டிருந்தால் அவ்வனுஷ்டானம் என்றைக்காவது நசித்துப்போகத்தக்கதே. ஆகையால், இளமைப் பருவத்தில் கணவனை இழந்துவிட்ட கைம்பெண்களை மறு கல்யாணம் செய்யவொட்டாமல் தடுத்து வைத்திருக்கும் சுபாவ விரோதமான கொடிய ஆசாரமென்கிற வழக்கமும் நசித்துப்போகக்கூடியதே. நாமனுஷ்டித்துவரும் இத்தீயவழக்கம் சுபாவதர்மத்தை அனுசரித்ததாயிருந்தால் இவ்வாசாரத்தை ஏன் உலகமுழுவதும் அனுஷ்டிக்கவில்லை. அறியாமையால் அனேகர் இந்த வழக்கம் உலகமுழுதும் அனுஷ்டித்து வருவதாக எண்ணியிருக்கலாம். நம்முடைய இந்து தேசம் உலகத்தில் 20-ல் ஒரு பங்குகூட ஆகமாட்டாது. மற்றெல்லாத்தேசங்களிலும் சுபாவ விரோதமான இவ்வழக்கம் அனுஷ்டிக்கப்படவில்லை. இந்த தேசத்திலும் அநேக மதஸ்தர்கள் பரவியிருக்க, அவர்கள் இத்தீய வழக்கத்தை அனுஷ்டிக்

காமல் இந்துமதத்தைத்தழுவியிருக்குமவர்களால் மட்டும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. அதுவும் பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களென்றும் உயர்ந்த வகுப்பினரென்றும் சொல்லிக்கொள்ளுபவர்களால் மட்டும் அனுஷ்டிக்கப்படுகிறது. இத்தீயவழக்கம் எக்காலத்திலுமில்லாமல், இக்கலியுகம் பிறந்தபின்னிட்டே சிலவகுப்பாரால்மட்டும் அனுஷ்டிக்கப்பட்டும், நிராக்ஷேபனையாயும் பரவாமல் வெகுகாலமாகவே மறுக்கப்பட்டும் வந்திருப்பதால், இக்காலத்தில் உலகமுழுதும் விருத்தியாகிவரும் கல்விச்செல்வத்தால் இயற்கைக்குவிரோதமான இத்தீயவழக்கம் நசித்துப்போகும்காலம் சமீபித்துவிட்டது. ஆகிலும் அது அடியோடு சீக்கிரம் வீழ்ந்து போகும்படியான வேண்டிய முயற்சிகளை நாம் செய்துகொண்டு போகவேண்டும். உலோகோபகாரராயிருந்த மகான் ஈசுவரசந்திரவித்தியாஸாகருடைய அபிப்பிராயத்தைக் கைக்கொண்டு பஞ்சாப் தேயத்தைச்சேர்ந்த லாகூர் என்ற நகரத்தில் விதவைகளை ரக்ஷிக்கும் பொருட்டு 1914-ஷு ஒரு சபையை ஸ்தாபித்து இதற்கு ஐக்கியமாகாணம், பேஹார், ஒரிசா, வங்காளம், பொம்பாய், ஆசாம்தேசம், இராஜபுதனம், மத்தியமாகாணம் முதலான இடங்களில் உபசபைகளையுண்டாக்கி சுமார் 7,000விதவைகளின் விவாகங்கள் செய்திருக்கிறார்கள். இவ்விதமாய் இந்த கொடிய ஆசாரத்தை வடதிசையிலிருந்து தூரத்திக் கொண்டுவந்து, சென்னையிலும், பெங்களூரிலும், குடகு பிரதேசங்களிலும் சபைகளை ஏற்படுத்தி அச்சபையாரும் விதவைகள் ரக்ஷணார்த்தமாய்ச் சாலைகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். 12-வருஷங்களுக்கு முற்பட்ட காலத்தில் நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்த பண்டிதர்களால் அலங்கரிக்கப் பெற்ற விசாகப்பட்டணம், கோதவரி, கிருஷ்ணா ஜில்லாக்களி

ுள்ள பண்டிதர்களோடு போராடி ஜயம்பெற்ற ராஜ மகேந்திரவரம்வித்துவானுகிய சென்னைப்பட்டினம் சர்வ கலாசாலைத்தெலுங்குபாஷை பண்டிதராகிய ராவ்பகதூர் பட்டம்பெற்ற ஸ்ரீ வீரேசலிங்கமபந்துலுவென்கிற பிரா மண உத்தமர் அநேக பிராமண விதவைப்பெண்களின் புனர்விவாகத்தை நடத்தி வைத்தார். அவ்விவாகங்களில் வைசிய கோமுட்டி விதவைப்பெண்ணின் கலியாணமு மொன்று நடந்தது. அந்த ஜில்லாக்களிலும் சபைகள் ஏற்பட்டுபிரசாரவேலை செய்து வருகிறார்கள். இதை அநுசரித்தே இத்திருச்சி நகரத்திலும் இக்கிளைச்சபை ஸ்தாபிக்கப் பெற்றது. இந்தப் புண்ணியாத்மாக்களின் திருவாக்கின் சொற்களையே நான் சொன்னதும் சொல் வதுமாகும்.

நாமிப்போது அனுஷ்டித்துவரும் ஆசாரத்தை விட்டுவிடும்படி நான் உங்களுக்குச் சொல்வதற்குமுன் அவ்வாசாரத்தால் ஜனசமூகத்துக்கு உண்டாகும் கஷ் டங்களையும். நஷ்டங்களையும் அத்தீய ஒழுக்கத்தை ஒழித்து விடுவதால் ஏற்படும் லாபத்தைப்பற்றியுஞ் சிறிது கவனிக்கக்கோருகிறேன்.

ஸர்வஸமானராகிய ஈசுவரன் ஸ்திரீ புருஷ பேத மற்று மானிடவர்க்க முழுவதும் இவ்வுலகத்தில் சாத் தியப்பட்டமட்டும் சம்பூரண சுகத்தை அநுபவிப்பதற் காக எண்ணங் கொண்டவரென்று முந்தியே சொல்லி யிருக்கிறேன். இவ்வுலகத்தில் சமஸ்த ஜீவகோடி இராசி களும் அடையத்தக்க ஆகாரம், நித்திரை, போகமென் கிற சுகங்களில் காமசுகம் முக்கியமானது. ஜெகதீசுரன் புருஷர்களுக்கு எப்படி பசி, தாகம், போகமென்கிற இச்சையை உண்டாக்கி இருக்கின்றனரோ, அவ்வண்ண மாகவே ஸ்திரீகளுக்கும் காம இச்சையை உண்டாக்கி

இருப்பதால், புருஷர்களாகட்டும், ஸ்திரீகளாகட்டும், அக் காமசுகத்தை நியாயமான வழியில் அடைய வேண்டு மென்பதே, ஈசுவரனது திருவுள்ளமென்பது தெளிவாய் இருப்பதால், விபசாரவழியிற் செல்லாமல் காமசாந்தி செய்து கொள்ளவேண்டும். காமசாந்தியின் பொருட்டு ஏற்பட்டமார்க்கம் விவாகசம்மந்தமே. புருஷனை இழந்த விதவைப் பெண்களுக்கு விவாகம் செய்து வைப்பதை விட்டு, அவர்களை எவ்வித நிர்ப்பந்தத்துக்குட்படுத்தி னாலும், மறுமையில் புண்ணியலோகம் கிடைக்குமென்று ஆசை வார்த்தைகளைச் சொன்னாலும், எவ்வளவு நல்ல உபதேசங்கள் செய்துவைத்தாலும், மானிட இயற்கைச் சுபாவம் மாறாமல் தீயவழியில் செல்லுமேயல்லாமல், பெரும்பாலோருக்கு இந்திரிய நிக்கிரகம் செய்யமுடி யாது. சகலமும் கற்றுணர்ந்து, ஒருவருடனும் சேராமல் சம்சாரபந்தமுமற்று, சரீரம் ஒடுக்கும்படிச் செய்து, ஆரண்யங்களில் வேர் கிழங்குகளைப்புசித்து, தலை கீழாய்த் தொங்கித் தவம்பண்ணிய மகான்களே அப் போதைக்கப்போது சாமாந்தரார்களாகி, தங்கள் புத்திதடு மாறிச் செய்யத்தகாதனவற்றைச் செய்தார்களென்றால், நெய், பால், தயிர் முதலானவற்றோடு நல்ல அன்னத்தைப் புசிக்கும் மானிடராகிய புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் காம இந்திரியத்தை ஜெயிக்க முடியுமா? முடியுமென்று சொல்வது மகாவிந்திய பர்வதமானது சமுத்திரத்தில் மிதக்குமென்று சொல்லத்தக்கதாகும்.

విశ్వామిత్ర పరాశర ప్రభృతయో వాతాంబు పర్ణాశనా
స్తేపి స్త్రీముఖ పంకజం సులలితం దృష్ట్వైవ మోహం గతాః
శాల్యన్నం సఘృతం పయోదధి యుతం భుంజంతి యే మానవాః
తేషామింద్రియ నిగ్రహో యది భవేద్వింధ్యః ప్లవేత్సాగరే.

விஸ்வாமித்ர பராசர ப்ரப்ருத யோ,வாதாம்பு பர்ணசன
ஸ்தேபிஸதிரீ முகபங்கஜும் சுலலிதம் த்ருஷ்ட்வைவ மோஹம்கதாஹ
சால்யன்னம் ஸக்ருதம் பயததியுதம் புஞ்சந்தியே மானவாஹ
தேஷாம் இந்திரிய நிக்ரஹோயதி பவேவத் விந்திய: ப்லவேத்ஸாகரே.

மகாரிஷிகளின் நிலைமை யிப்படிக்கிருக்க கற்றுணர்ந்த வித்வான்களிருக்க வேண்டிய நிலைமையைச் சொல்லும் தர்மசாஸ்திரங்களை விதித்த மனுவானவர் சொன்ன சுலோகமாவது.

మాత్రా స్వస్రా దుహిత్రావా నవివిక్తాసనో భవేత్
బలవానింద్రియ గ్రామో విద్వాంస మపికర్షతి.

மாத்ரா ஸ்வஸ்ரா துஹித்ராவா நவிவிக்தாஸனோபவேத்
பலவா நிந்த்ர்யக்ராமோ வித்வாமஸ மபிகர்ஷதி.

மகாவலிமை பெற்ற காமேந்திரியமானது கற்றுணர்ந்த வித்வான்களையும் வஞ்சிக்குமாகையால், அவர்கள், பெற்ற தாயாகிலும், உடன்பிறந்தவளேயாகிலும், தன் குமாரத்தியேயாகிலும், எக்காரணத்தை முன்னிட்டும் ரகஸ்யமான இடத்தில் கூடிப்பேச உட்காரலாகாதென்று வித்வான்களுக்கே விதித்திருப்பதால் மந்தமதிகள் விஷயமாய்ச் சொல்லவேண்டியதில்லை.

உலர்ந்த சருகுகளையும், வாயுவையும் பக்ஷித்தும் ஆரண்யங்களில் இரும்பு வலைகளை கௌபீனமாய்க்கட்டிக்கொண்டும் வாசம் செய்யும்படியான தபோதனர்களின் ஸ்திதியும், பெற்றோர்களைவிட்டுக் குருகுலவாசம் செய்து நிஷ்டையோடுகூடி வித்தியாப்பியாசம் செய்யும் வித்வான்களுடைய மனமேகெட்டுப்போய்விடுமென்றால், கொஞ்சமும் வித்தையற்று, இது தக்கது, இது தகாதது என்கிற விவேகமற்று, இந்திரிய சுகத்துக்கானுகூலமாயிருக்கும் நன்கமைந்த வீடுகளில் வாசம் செய்து

கொண்டு, நற்பிராயத்தோடு கூடிய துஷ்ட இளைஞர் களாகிய ஆண்பிள்ளைகளின் நடுவில் நடமாடிக்கொண்டு உப்பு, புளிப்பு, தித்திப்பு முதலான நவுாக்கு ருசிகர மான பதார்த்தங்களைத்தின்று, நற்பருவத்தோடு கூடிய இளம்கைம்பெண்கள் காமேந்திரியத்தை அடக்கியாள முடியுமென்று நீங்கள் கனவாவது காணப்போமா? நீங்கள் நம்பமுடியுமா? நம்பலாமா?

శ్లో॥ స్త్రీణాం ద్విగుణ ఆహారో-బుద్ధి శ్చాపిచదుర్గుణా

సాహసం షడ్గుణం చైవ-కామశ్చాష్టగుణో భవేత్.

ஸ்திரீணும் த்விகுண ஆஹாரோ புத்தி: சாபிச தூர்க்குணு

ஸாஹஸம் ஷட்குணம் சைவ காமஷ்சாஷ்ட குணோ பவேத்.

மன்மதனுடைய பாணத்துக்கு மகரிஷிகளாகிய தபோதனர்களின், வித்வான்களின் மனமே காற்றுக் கெதிரிலிருக்கும் தீபத்தைப்போல் அசைவுற்றுத் தட்டுக் கெட்டுத் திண்டாடிக்கொண்டிருக்க அபலர்களாகிய அநாத இளம் கைம்பெண்களின் மனது எம்மாத்திரம். உங்கள் பாலவிதவைகளின் ஆபரணங்களை எடுத்து விட்டும், அவர்கள் ரூபத்தை மாற்றியும், மூன்று பொழுது சாப்பிடுவதை நிறுத்தி அவர்கள் வயிற்றைச்சுட்டாலும், கட்டாந்தரையிற் படுக்கும்படிச்செய்து அவர்கள் சரீரம் நோகும்படிச் செய்தாலும், ஈசுவரனே அவர்களுக்கு கொடுத்திருக்கும் தலைமயிரைக் கழித்து மொட்டை யாக்கி இன்னமுமனேக கொடிய கஷ்டங்களுக்கு அவர் களை உட்படுத்தினாலும், பகவானே அவர்களுக்கு இயற் கையாயமைத்து வைத்திருக்கும் காம இச்சையை உங் களால் எடுத்துவிடமுடியுமா? நற்பிராயத்தோடு கூடிய ஒரு புருஷனுக்கு, மனைவியிறந்தபின், அவனுக்கு காம இச்சை மாறுமல் இருப்பதை முன்னிட்டு அவன் மறு

படியும் விவாகம் செய்துகொள்வது ஈசுவரனது திரு வுள்ளமாகுமென்று எப்படி யூகிக்கத்தக்கதோ அவ்வண் ணமாகவே புருஷன் இறந்துபோன காரணத்தால் அந்த ஸ்திரீக்குக் காமஇச்சை மாருமல் இருப்பதை முன்னிட்டு அவ்விதவை ஸ்திரீக்கும் புனர் விவாகம் செய்துவைப் பது பகவானுடைய திருவுள்ளக்கருத்தாகு மென்று நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டாமா? அவருடைய திருவுள்ள இஷ்டத்துக்கு விரோதப்பட்டு இவ்வுலகத் திலும் அவ்வுலகத்திலும் எவ்வித நன்மை யடைய முடியும்? அப்படிச் செய்யத்துணிவது கொடியசெய லாகுமேதவிர மானிட சுபாவத்துக்குப்பொருந்துமா? புருஷசுகத்தை அனுபவிக்கச் சிருஷ்டிக்கப்பட்ட ஸ்திரீ களுக்கு அவர்கள் விதவைகளானவுடன் மறுகலியாணம் செய்து வைப்பதைவிட்டு உங்கள் வலிமை முழுதும் செலுத்தி, அவ்விதவைகளின் ஆயுட்கால முழுதும் துயரத்துக்கு ஆளாகச்செய்வது எவ்வளவு பாபச்செய லாகும்? எவ்வளவு கொடூரமானது? இதற்கு நரகலோக மடைவதைவிடப் புண்ணியலோகம் கிட்டுமா? இவ்வளவு தீமையான ஆசாரத்தை நாம் கைக்கொண்டு நம்விதவை களை நாம் வைத்திருக்கும் கொடிய நிலைமையைப்பார்த்து பிரதேசத்தார் நம்மைக் கொடியவர்களென்றும், தம்மவர் கள் மீதே தயையற்றவர்களென்றும், இப்பேர்ப்பட்ட ஜாதியாருக்குச் சுதந்தரம் கொடுக்கலாகாதென்றும், என் றைக்கும் இவர்களை அடிமை நிலைமையில் வைத்தாலொ ழிய இவர்களுக்குப் புத்திவரமாட்டாதென்றும் எல்லா தேசத்தினரும் நம்மீது கோபிக்கிருர்களே! இதையாவது நீங்கள் கவனிக்கக்கூடாதா? இதர தேசத்தாருக்கும் நம் விதவைகள் விஷயமாய்த் தயை பிறக்கும்போது உங்கள் பால விதவைகளின் கஷ்டங்களைப் பார்த்து உங்களுக்

கேன் இரக்கம் உண்டாகிறதில்லை? நேற்று முந்தியநாள் வரைக்கும் எவ்வளவோ பிரியத்துடன் வளர்த்துப் புருஷன் இறந்து போனானென்ற படுவார்த்தையைக் கேட்டவுடன் அப்பெண்ணின் சகல ஆபரணங்களையும் களைந்து விட்டு உருவத்தைமாற்றி முக்காடிட்டு உங்கள் வயிற்றிற் பிறந்த பெண்பிள்ளைகளை மூலையில் குந்தவைக்க உங்களுக் கெப்படி மனம் ஒவ்வுகின்றது?

ஒரே கற்பத்திற் பிறந்த உடன்பிறந்தாரும் தம்மில் லம்புகுந்த மருமகளும் இரவு பகல் அழுது கொண்டு ஆயுள் முடியும் வரையும் தாம் விதவையான துயரத்தை அநுபவித்துக் கொண்டிருக்கும் போது, அண்ணன் தம்பிகளும், அத்தையும் மாமனும், மைத்துனன் மைக் துனியும், இரக்கமற்று எப்படிப் பார்த்து சகிக்கிறார் கள்? இவர்களுடைய மனம் கல்லால் செய்யப்பட்டிருக் கிறதா? ஓ! ஜனங்களே! நம்தேசத்து விதவைகள் படும் கஷ்டங்களைப் பார்த்து பரதேசத்தார் இருதயம் நீரா யுருகிப் பரிதவித்துக் கொண்டு இத்தேசத்தை சுக நிலைமைக்குக் கொண்டு வரவேணுமென்று வேண்டிய முயற்சிகள் செய்து கொண்டிருக்க நீங்கள் மட்டும் விசாரமற்றிருக் கின்றீர்களே! இரக்க முண்டாகாமல் விதவைகள்மீது உங்களுக்கு விரோதமும் பிறக்கிறதே! இளம் கைம்பெண்களின் சௌகரியத்துக்குரிய நியாய மான மறுவிவாகக் கதவை மூடிவிட்டதால் அவர்கள் காமசாந்தியின் பொருட்டுத் தப்புவழிகளிலிறங்குவதா லுண்டாகும் அவமானத்தையாவது நீங்கள் ஆலோசித் துப்பார்க்க வேண்டாமா? காமத்தைச் சாந்தி செய்து கொள்ள நல்வழி காணாமல் விபசாரத்திலிறங்கி உங் களுக்கே அனர்த்தங்களை உண்டாக்கிவைப்பது உங் களுக்குத் தெரியாமலிருக்கிறதா? விபசாரமே அநேக

கொலைகளுக்கு மூலகாரண மென்பது விவேகிகளுக்குத் தெரியாத விஷயமல்லவே! தம்முடைய வீட்டில் எவ ராவது விபசாரம் செய்கிறார்களென்ற அநுமானம் உண்டானாலும், தங்கள் ஸ்திரீகளையும் திருட்டுப் புரு ஷனையும் கொன்று தாமும் துரைத்தனத்தாரின், கடின சிக்ஷைக்குட்பட்டுத் தங்கள் பிராணனையும் இழந்து விடு கிறார்களென்பது உங்களுக்குத் தெரியாத விஷய மல்லவே! விபசாரம் வெளிப்பட்டதாகில் அவமானத் தைப் பொறுக்கமாட்டாமல் ரோஷத்தால் குளங்களிலும், நதிகளிலும், கிணறுகளிலும் அநேக விதவைகள் விழுந்து தங்கள் உயிரை விட்டுவிடுவது உங்களுக்குத் தெரியாத காரியமா? இவைகளையெல்லாம் ஆலோசித் துப் பார்த்தால், நியாயமாயும் சாஸ்திர சம்மதமாயு மிருக்கும், புனர் விவாகத்தை நீங்கள் செய்து வைக்காத காரணத்தால் விபசாரத்துக்கும் கொலைகளுக்கும் நீங்களே காரணமா யிருக்கிறீர்களென்று உங்களு டையபுத்திக்கு எட்டவில்லையா? புருஷனுடைய சொத்து முழுதுமடைந்த விதவைகள் வெகுசீக்கிரம் கெட்டுப் போய், கள்ளப் புருஷர்களுக்கு இழந்துவிட்டு, தம்மிள பருவம் சென்றபின் சோற்றுக்கும் துணிக்கும் வழி யில்லாமல், காய்கறிகள் விற்றோ, சாப்பாட்டுக் கடைகள் வைத்தோ, செய்யத்தகாத இழிவான காரியங்களைச் செய்தோ ஜீவிப்பது உங்களுக்குத் தெரியாமலிருக் கிறதா? தம்கையில் சொத்தில்லாத பாவிய விதவைகள் தான் பிறந்த வீட்டிலோ அல்லது மாமியாள் வீட் டிலோ இருந்து வீட்டுக்கு வாங்கின உப்பு முதலான பதார்த்தங்களைத் தம் கள்ளப் புருஷர்களுடைய வீட்டுக் கனுப்பிக்கொண்டும், சமயம் வாய்த்தபோது வெள்ளிப் பாத்திரங்களையும் நகைகளையும் திருடி ரகசியமாய்

தம் கள்ளப் புருஷர்களுக்குக் கொடுத்தும், ஒரு வேளை களவு வெளிப்பட்டால் வீட்டு எஜமானனே களவை வெளிப்படுத்தாமலும், அப்படிச் செய்வதால் தனக்கே அவமானம் உண்டாகுமென்று வாயை மூடிக்கொண்டு களவைமறைத்துவிடும் நிலைமை யடைகிறார்களென்று உங்களுக்குத் தெரியாமலிருக்கிறதா? (மானம் போவதை விட தனநஷ்டம் பெரிதல்லவாகையால் இவ்விஷயத்தைப் பற்றி விஸ்தரித்துச் சொல்வது அனுவசியமாகும்.)

சில விதவைகள் வீட்டிலுள்ள நிர்ப்பந்தங்களுக்கு கட்டுப்பட்டிருக்க இசையாதவர்களாய்க்காமப்பைத்தியத்தால் தங்களுடைய பிரியமான பெற்றோர்களையும் உடன் பிறந்தாரையும் விட்டுவிட்டு எந்த இரவிலேயோ தம் கையிற்கிடைத்த சொத்தை எடுத்துக்கொண்டு, எந்த ஜாதியானையோ கூட்டிக்கொண்டு வெளிப்பட்டுப் போய் விடுகிறார்களே! என்றைக்காவது காணப்பட்டால் தன வந்தர்களான பெற்றோர்களாவது, மாமனாராவது, உலக அபவாதத்துக்குப் பயந்து தம் விதவைப் பெண்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு, கோவில் குளங்களுக்குப் போயிருந்தாள், பந்துக்கள் வீட்டுக்குப் போயிருந்தாள் என்று சொல்லிக்கொண்டு மறுபடியும் வீட்டில் வைத்து கள்ளப் புருஷனையும் சமாதானப்படுத்தி விபசாரத்தை மறைத்து வைக்கிறவர்களும் இருக்கிறார்களல்லாவா?

உங்கள் புத்திரிகளாகிய பாலிய விதவைகளைப்பற்றி நீங்கள் படும் கஷ்டங்கள் உங்கள் மனதுக்கே தெரியும். அவர்கள் கெட்டவழியிற் செல்லாதிருக்கும்படி நீங்கள் படும் விசனமொன்று. அவர்களுடைய துர்நடத்தையால் ஏதாவது கெடுதி சம்பவித்தால் அதைப்போக்கிக் கொள்வதற்கு ஏற்படும் துயரம் மற்றொன்று. விதவைகள் செய்

யும் பரபுருஷனுடைய சம்போகத்தால் என்றைக்காவது கர்ப்பம் ஏற்பட்டுவிடும். விதவைகளின் கர்ப்பத்தை மறைத்து வைத்தலும் நஷ்டம் வெளிப்படுத்தினலும் நஷ்டமுண்டாகும். இக்கர்ப்பம் பிறருக்குத் தெரிந்து போமென்ற பயத்தால் ரகஸ்யமாய்க் கள்ளப் புருஷன் கொடுத்த மருந்துகளைச்சாப்பிட்டுக்கர்ப்பத்தை அழித்து விடச்செய்து கொள்கிறார்களல்லவா? சிற்சிலசமயங்களில் யாதொன்றமறியாத பெற்றோர்களும் இந்தப் பாதகத் துக்கு உசாத்துணையாக வேண்டியதா யிருக்குமல்லவா? கர்ப்பத்தை யழியக் கொடுத்த மருந்தால் கர்ப்பமழியா மல் விதவைப் பெண்ணையும் ஒருக்கால் கொன்றுவிடு மல்லவா? கொடுத்த மருந்தால் எதுவும் பலிக்காமல் கர்ப்பம் பெருகிச் சிசுபிறக்கும் பக்ஷத்தில் பெற்றோர்கள் துக்கப் படுகிறார்களல்லவா? இந்த அபவாதத்தை நிவர்த்தி செய்துகொள்வதற்கு என்ன செய்வார்கள்? அச்சமயம் சிசுவைக் கொன்றுவிடுவதைவிட வேறுவழி தோன்றாது. தன் பெண்வயிற்றிற் பிறந்த சிசுவாகை யால் அதன் முகத்தைப் பார்த்துத் தம்கையால் கொல் வதற்கு மனம் துணியாமல் எக்காரியமும் செய்யத் தோன்றாமல் ஆயிரம் தேளும் பூரானும் கொட்டினதைப் போல மனதில் வாதனைபட்டுக் கொண்டு தன் குலத் தாருக்கும், பந்துக்களுக்கும், அயலாருக்கும் பயந்து பெற்றதாயாகினும் அச்சிசுவைக்கோல்லும் பாவத் துக்கு ஆளாக வேண்டியதாயிருக்கிறதல்லவா? ஐயோ இது எவ்வளவு பாபச்செயல்! இது வரையில் எத்தனை லட்சம் ஆண் பெண் சிசுக்கள் கொல்லப் பட்டிருக்கிறார் கள்! இன்னம் எத்தனை லட்சம் சிசுக்களை கொல்லப் போகிறீர்கள்! கொன்று எறிந்து விட்ட இளம் சிசுக் களின் சுந்தரமான முகத்தைப் பார்த்துக் கொடூரமான

பாவிகளுக்கும் இரக்கம் பிறக்கிறதென்றால் உங்களுக்கேன் இரக்க முண்டாகிறதில்லை? உங்கள் இருதயத்தைக் கடவுள் இரும்பாலும் கல்லாலும் செய்தாரா? தம் பெண்மக்கள் குழந்தைகள் பெற்றவுடன் கொண்டாடி, பேரன் பேத்திகளை வளர்க்க வேண்டியதாய் மாரும் கர்ப்பத்தை அழிக்கவும் சிசுக்கொலை செய்யவும் உடன்படும்படிச் செய்தது, நீங்கள் வெகுகாலமாயனுஷ்டித்து வரும் துராசாரத்தினாலல்லவா? இப்போதாவது உங்கள் மனதில்படுகிறதா? பார்த்துப்பார்த்துச் சிசுவைக் கொலைசெய்யத் துணியாதவர்கள் ஆண்சிசுக்களைப் பறையர், சக்கிலியருக்குக் கொடுத்தால், உங்கள் கண் காணும்படியாய் அக்குழந்தைகள் கக்கூஸ் வாரிக்கொண்டும், சாக்கடைகளைச் சுத்தம் பண்ணிக்கொண்டும் இன்னும் அநேக ஈனத்தொழில்கள் செய்வதைப்பார்க்க உங்களுக்கு மனம் துணியுமா? பெண் சிசுக்களை தாசிவேசிகளுக்குக்கொடுத்து விட்டால், அக்கன்னிகைகள் எல்லாரோடும் விபசாரம் செய்து கொண்டிருப்பதை நீங்கள் பார்க்கும்போது உங்களுக்கு ஆநந்தமாயிருக்குமா? விபசாரம் செய்பவள் உலகத்தோரால்நிந்திக்கப்பட்டு நரியின் ஜன்மத்தை யடைந்து பாவரோகங்களால் பீடிக்கப் படுவாளென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றனவே! இப்பேர்ப்பட்ட கஷ்டத்துக்கு மறு ஜென்மத்திலும் உங்கள் பெண்களை ஆளாக்குகிறீர்களே! இது எவ்வளவு மகத்தான பாவம்! இதுவ்வரையில் சொல்லிய கொடிய பாவச்செயல்கள் உங்களுக்குப் புண்ணிய காரியங்களாகவும், புனர் விவாகம் செய்து வைப்பது மட்டும் உங்கள் இருதயத்தில் பாவகாரியமாய்த் தோன்றுமாகில், இவை யெல்லாம் நீங்கள் மறு கல்யாணத்தை மறுத்ததால் பரலோகத்துக்குச் செல்லும் போது அங்கு அநுபவிக்க கொண்டுபோகும் கொடூ

மான பாவமூட்டைகள் ஆகுமாதலால், நீங்கள் இந்தத்தீய வழக்கத்தை ஒழித்து விட்டு, உங்கள் விதவைப் பெண்களின் மறு கல்யாணத்தைச்செய்து வைப்பீர்களென்று நம்புகின்றேன்.

இதுவரையிலும் சொன்னபடி இளம் கைம்பெண்களில் துஷ்டச் செயல்களற்ற பல புண்ணியவதிகளும் இருக்கிறார்கள். அவர்கள் நிலைமையைப்பற்றி ஆலோசித்துப் பார்த்தால் சுகமற்றதும் விசனத்தோடும் கூடிய பிழைப்பாயே இருக்குமென்பதிற்சந்தேகமிராது. அவர்களது பிரியத்திற்கு முக்கிய பாத்திரனுயிருந்த உயிர்நாயகன் காலஞ்சென்றபின் அவர்களிவ்வுலகத்தில் சுகமடைய வேறு ஆதரவு கிடையாது. புருஷனோடு கூடியிருந்த காலத்தில் அவரது வீடு பூலோக சுவர்க்கம் போலிருக்கும். புருஷன் போனபின் அவ்வில்லங் காடாய்த் தோற்றும். இவ்வுலகத்தில் ஒருவரொருவருடைய சகாயத்தாலும் பந்தத்தாலும் சுகமுண்டாகுமே தவிர, பிரியமான பந்தமற்றுத் தனிப்பட்டவர்களுக்கு இலௌகிக சுகமென்பது கிடையாது. இப்படிப் பரஸ்பர பந்தத்துக்கும் பிரஜா அபிவிர்த்தி உண்டாவதற்கும் சுகசந்தோஷங்களுக்கும் நியாயமான மார்க்கம் விவாக சம்மந்தமேயாகும். விவாக சம்மந்தத்தால்தான், மனைவிகள், புருஷர்கள், தாய் தந்தைகள், அத்தைகள், மாமன்கள், மைத்துனர்கள், மைத்துனிகள், அண்ணன் தம்பிமார்கள், தமக்கை தங்கைகள், குமாரன் குமாரத்திகள், முதலிய சுகத்துக்கேற்ற பந்துவர்க்கங்கள் ஏற்படும். விவாக பந்தத்தால்தான் ஸ்திரீ புருஷர்கள் ஓரே உடலுடையவர்களாகி, ஒருவரோடொருவருக்குள் இச்சையுண்டாகி, ஒருவரோடொருவருடைய சுகத்தை விரும்

பிக்கொண்டு ஒருவருக் கொருவர் உசாத்துணையாகி நோயற்ற நிசையிலும், வியாதியோடுகூடிய சமயத்திலும், சுகமான காலத்தும், துயருற்ற காலத்தும், ஐசுவரியம் வந்தகாலத்தும், தரித்திரம் வாய்ந்த காலத்தும், எக் காலத்தும் பிரியாதவர்களாய்ச் சுகப்படுவார்கள். விவாக பந்தம் ஏற்படா விட்டால் ஸ்திரீ புருஷர்களுக்குள் ஒற் றுமையும் பிரியமும் ஏற்படாமல், சிசுவின் போஷணை யைப்பார்ப்பவரில்லாமல் குழந்தைகளின்படிப்புக்குறைவு பட்டு, நாளடைவில் மானிடர் மிருகாதிகள் போல் ஆகி விடுவார்கள். முக்தி யிச்சையற்று தனித்திருக்கும்படி ஏற்பட்டால் சரீரத்துக்கும் மனதுக்கும் போதுமான வேலையில்லாமல்பாவ எண்ணங்களுண்டாகிப் பாவ காரி யங்களில் இறங்கிவிடுவார்கள். புருஷன் ஒருவன் மட்டு மிருந்து மற்றவை எவை இல்லாவிட்டாலும் குறைவு தோன்றாது. எல்லாமிருந்தும் புருஷன் ஒருவன் மட்டும் இல்லாவிட்டால் உலகத்திலுள்ள யாவும் குறைவாகவே தோன்றும். புருஷனொருவனிருந்தால் பாரியாளின் மானத்தைக் காப்பாற்றுவான், குடும்பத்தைக் காப்பாற் றுவான், கௌரவம் உண்டாகச் செய்வான். எது இல்லா விட்டாலும் பதியோடும், குழந்தைகளோடும் கூடியிருப் பதே ஒரு ஸ்திரீக்கு எப்போதும் சந்தோஷகாமாக விருக்கும். பதியில்லாவிட்டால் ஸ்திரீ தன்னை ஒருவன் அவமதித்தால் யாருடன் சொல்லித் தன் துயரத்தை யாற்றிக்கொள்வாள்? எது செய்வதென்று சந்தேகம் தோன்றினல் மனதார ஆலோசனை யார் சொல்வார்? தன்னழகையும் குணச்செல்வத்தையும் பார்த்துப் புகழ் வார் யார்? பதி இறந்துபோன நாள் முதல் எல்லாச்சுகங் களுக்கு மாதாரமாயிருக்கும் இவ்வுலகம் எல்லாத்துயர மும் நிறைந்ததாகிப் பெரும் சுமையாய்க்காணும். குங்கு

மப்பொட்டழகு மாறிப் பாழ் முகமாய்விடும். தங்கக் கைகாப்புகள் மாறி ராகிப்பட்டையாய் விடும். கழுத்தில் தரித்திருந்த முத்துமாலை இடுப்பில் தரித்த தங்க ஒட்டியாணம் இருந்த இடமும் தெரியாமற் போய்விடும். பட்டும் சரிகையும் கலந்து தரித்த புடவைகள் முரட்டுத் துணிகளாய் விடும். கட்டிலும் மிருதுவான மெத்தைகளும் கட்டாந்தரையும் ஓலைப்பாய்களாய்விடும். பாலிய முதல் வாசனைத் தைலங்கள் தடவி வளர்த்து தினந் தோறும் சீவிப் புஷ்பங்களைச் சூட்டிக்கொண்டு உயிருக்கு சமானமாய்ப்பார்த்து வந்த கூந்தல்கள் பேன்களெல்லாம் வாசம் செய்யும் தூராகிவிடும். சிலர் நாவிதனின் கூர்மையானகத்திக்குக்கூந்தலை ஒப்புவித்துவிடுகிறார்கள். ஐயோ பாவ ஆசாரமே! இப்படிச் செய்வதைவிட ஒரே தடவையாய்த் தலையை வெட்டி விடுவது உத்தமமாய்த் தோன்றாதா? மூன்று பொழுதும் வயிறாரச்சுகபோஜனம் செய்தவளைப் பிராணன் போகும்படி ஒருபொழுது அரை வயிறு சுகமற்ற போஜனம் கொடுத்து வயிறைச் சுடுதல் எவ்வளவு பரிதாபகரமானது. அந்தப் பால விதவைப் பெண்களுக்குத் தாம் முன் தரித்திருந்த ஆபரணங்களையோ உடுத்தியிருந்த வஸ்திரங்களையோ படுத்திருந்த கட்டில்களையோ பார்த்த அளவில் அவர்கள் மனது தீப் பற்றித் துக்கமானது கொதித்துக் கொதித்துப் போகாதா? தன்வயது சுபமங்கிலிகள் ஆபரணங்களைப் பூண்பதையும், புது வஸ்திரங்களை அணிவதையும் பார்த்தால் தனது பிழைப்பு எறிந்து போய்விட்டதல்லவா வென்று மனதானது குபீரென்று எரிந்து கொண்டு போகாதா? தமக்கு சிநேகமாயிருந்தபேர் சுபகாரியங்களுக்கும் சுபங்களுக்கும் அழைக்கப்படவும் விருந்துகள் சாப்பிடச் சென்றாலும் அப்பேர்ப்பட்ட நோன்பை நாம் செய்யாம

லல்லோபோய்விட்டோமென்று நினைத்து தம்ஈால்துக்கத் தால் பிளவுபட்டுப் போகாதா? தன்வயது சமானர் குழந்தைகள் பெற்றுக்கொண்டும் கணவனோடு இல்லறம்செய்துகொண்டு மிருப்பதைப் பார்த்தபோதும் அவர்களடையும் சுகாதிகள் நினைவுக்கு வந்தபோதும் வயிறு வெடித்துப்போகாதா? புருஷனை இழந்த பெண்பிள்ளைகள் எவ்வளவு கொஞ்ச வயதுள்ளவர்களானாலும் அயல் வீடுகளில் விவாகாதி உற்சவங்கள் நடக்கும்போது அங்குப் போய் வேடிக்கைகள் பார்ப்பதற்குக்கூட அவர்கள் நோற்கவில்லை யல்லவா? அயலார் வீட்டளவும் போவானேன்? தன் வீட்டில் சுபகாரியங்கள் நடந்தாலும் நாலு பேருடன் கலந்து சந்தோஷமாய்த் தலை நிமிர்ந்து திரிவதற்கும் கூடாமல் எவர் கண்ணிலும் படாமல் தெய்வமிப்படிச்செய்ததல்லவாவென்று அழுதுகொண்டு அதே வீட்டின் எம்மூலையிலேயோ ஒதுங்கி விழுந்து கிடக்க வேண்டுமல்லவா? ஆயிரம் சொற்கள் சொல்லுவானேன். உலகத்தில் பண்டிகைகள் சம்பவிக்கிற காலத்தில் எல்லாரும் சந்தோஷங் கொண்டாடும் நாளெல்லாம் அவர்கள் விசனமனுபவிக்கும் நாள்களாகுமல்லவா? பெரியோர்களாகிய தாய்தகப்பன்மார்கள் சயன அறையில் படுத்து சுகம் அனுபவிக்கும்போது, ஒரிரவுசுகத்துடனோ அதுவுமின்றியோ விதவை நிலையடைந்த பால்ய விதவைகள் படும் துயரம் எவ்வளவென்று சொல்வதற்கு எவர்களாற்றான் முடியும். புருஷனை இழந்த குமாரத்தி, இரவுகளில் கட்டாந்தரையில் பாயின்மீது ஒண்டியாய்ப் படுத்துத் தன் துர்தசையை நினைத்துக்கொண்டு விசனப்பட்டுக் கொண்டிருக்கையில், தாய்மார்களும், உடன் பிறந்த மூத்தோரும், இளையோரும், உடன் பிறந்தார் சம்சாரங்களும், அத்தைகள் முதலானவர்கள் கட்டிலின்

மேல் மெத்தையில் படுத்து சுகமடைவதைவிட மரண மடைந்து விடுவதே யோக்கியதை யென உங்களுக்குத் தோன்றவில்லையா? இவ்வித கஷ்டங்களுக்குட் பட்டிருக்கும் உங்கள் விதவைப்பெண்களை ஆதரித்து சாஸ்திர சம்மதமாக விருக்கும் மறுவிவாகம் செய்து வைத்து முன்னிறந்துபோன கணவன் துயரத்தைமாற்றுவதற்கு புத்தியின்றி, இரக்கமற்று, கொடூரப் பிசாசமாகிய ஆசாரத்துக்கு அடிமைப்பட்டு, அவர்களை ஆயுள் பரியந்தம், தீராத துயரத்துக்கு இரையாக்குதல், மகத்தான பாவமல்லவா? இதற்குப்பயன் பயங்கரமான யமலோக மநுபவிப்பதைவிட வேறு எது கிடைக்கத்தக்கது.

ஆகையால் சகோதர சகோதரிகளே! நீங்கள் இந்த அஞ்ஞானநித்திரையிலிருந்து எழுந்து உங்களுக்கு பகவான் கொடுத்திருக்கும் ஞானமென்ற தீபத்தை ஏற்றி நன்ருய்க்கண்களை விழித்துப் பார்த்து

"மாரிமலை முழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்
சீரியசிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர் பொங்கவெப் பாடும் பேர்ந்துதறி
மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு
போதருமாப்போலே பூவைப்பூவண்ணுவுன்
கோயில் நின்றிங்ஙனே போந்தருளி கோப்புடைய
சீரியசிங் காதனத்திருந்து யாம்வந்த
காரிய மாராய்ந்தருளேலோ ரெம்பாவாய்."

என்று பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகிய ஆண்டாளருளியபடி நம் பெருமானைத் தியானித்து மாரிகால முழுதும் குகையில் தூங்கிக் கடும்பசியால் நித்திரையிலிருந்து எழுந்து வந்த சிங்கமானது யானை முதலாகிய பெரிய மிருகாதிகளின் மேற்பாய்ந்து தன்

ஆகாரத்தைக் கிரகிப்பதுபோல் மேற்சொன்ன இந்த ஆசாரப் பிசாசு எங்கு எதிர்ப்பட்டாலும், நன்றுய்ப் பிடித்து அதன் தலையை மொட்டையடித்து, உங்கள் பாதத்தால் நசுக்கி, அதன் உயிரை இரைகொண்டு, பாதாளலோக மடையும்படிச் செய்து, சர்வேசுவரனது சிம்மாசனத்தை அவரதே யாக்கி, அவர் மானிட ரனைவர்க்கும் கொடுத்த சுகத்தை உங்கள் விதவைகளும் அநுபவிக்கும்படி சாஸ்திரசம்மதமான மறுவிவாகத்தை நீங்கள் செய்து வைப்பீர்களாகில், நீங்கள் ஈசுவரனது திருவடியடைந்து, நித்தியானந்தத்தை அனுபவிக்கத் தகுதி யுள்ளவர்களாவீர்களென்று உலகமனைத்தும் சொல்லும்; அப்போது உலகத்தார் உங்களை மதிப்பார்கள்.

———

# இரண்டாவது பாகம்.

———



அறிவிற்சிறந்த சகோதரர்களே :—



இதுவரையில் நான் சொல்லிவந்த விஷயங்களினால், இரக்கமும், தயையும் வாய்ந்த, தர்ம சொரூபியாகிய சர்வேசுரன்படைத்த சமஸ்தஜீவகோடி இராசிகளும், எக்காலத்தும் சுகத்தை அனுபவிப்பதே அவர் இச்சை என்றும், இதற்கு விரோதமாய்ப்போதிக்கும் சாஸ்திரங்கள், பிரமாணங்கள் ஆகமாட்டா தென்றும் சுகத்தை அனுபவிப்பதின் பொருட்டு, ஆகாரம், நித்திரை, போகம் என்கிற இயற்கையாகிற இச்சையை ஸ்திரீ, புருஷ பேதமன்னியில் சகல பிராணிகளுக்கும் ஈசுவரன் கொடுத்திருப்பதால் ஆகாரத்தை அடைவதற்கும் நித்திரை போவதற்கும் வசதியான சுக இல்லத்தை அடைவதற்கும், வேண்டிய திரவ்வியத்தை தீய வியாபாரங்களைச் செய்யாது நல்வழியால் தேடுவது எப்படி ஆவசியமாகுமோ, அப்படியே போக இச்சையைச்சாந்திசெய்துகொள்வதற்கும், விபசாரவழியிலிறங்காமல் விவாகம் செய்துகொண்டு அவ்விச்சையை அடைய வேண்டியது, அவர் கட்டளை என்றும், விபசாரம் செய்வது கொடியபாபமென்றும், அப்படிச் செய்பவர்கள் உலகத்தோரால் நிந்திக்கப்பட்டு நரியின் ஜன்மமடைந்து, தீராத பாவரோகத்தால் பீடிக்கப்படுவாரென்றும் சாஸ்திரங்கள் விதித்திருப்பதால், புருஷனை இழந்துவிட்ட விதவைகளுக்கு நியாயமான புனர்விவாகம் செய்து வைக்காததால் அவர்கள் தீய வழியிற் செல்லுவதினால், அவர்களை

நரியின் ஜன்மத்துக்கு இரக்கிய பவத்துக்கும் புருஷர்களாகிய நாமே காரணமாகிறோமென்றும், மனைவி இழந்துபோயும் புருஷனுக்குப் போக இச்சை போகாமலிருப்பதால் அப்புருஷனுக்கு மறுவிவாகம் செய்து வைப்பது ஈசுவரனது திருவுள்ளக் கருத்தென்று நாம் யூகித்து புருஷர்களாகிய நாம் மறுவிவாகம் செய்து கொள்வதுபோல், புருஷன் இறந்த மாத்திரத்தில் ஸ்திரீகளுக்குள்ள போக இச்சையும் மாறாமல் இருப்பதை முன்னிட்டு, விதவை ஸ்திரீகளுக்கும் விவாகம்செய்து வைப்பதும் பகவானின் கட்டளை என்று கிரகிக்க வேணுமாயும், நான் தெரிவித்துக்கொண்ட விஷயங்களை நீங்கள் நன்றாய் அறிந்து, இனி சொல்லப் போகும் விஷயங்களை. தயையோடும் நியாயத்தோடும் கூடிய மனதுடன் அங்கீகாரம் செய்யவேணுமாய்த் தாழ்மையாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

விதவையாய் விட்ட ஸ்திரீகளுக்கு முதலில் புனர் விவாகத்தை விதித்தும், அவ்விதியின்படி மறுவிவாகம் செய்து கொள்ளாதவர்கள், பிரம்மசரிய விருதத்தை அனுஷ்டிக்க வேணுமென்றும், இவ்விருதம் அனுஷ்டிக்க முடியாததென்று தோன்றினால், சஹகமனம் அதாவது புருஷனோடு உடன்கட்டை ஏறவேணுமென்று சாஸ்திரங்கள் விதித்திருப்பதால் உலகத்தில் விபசார பாவத்தை போக்குவதற்காகக் கபிலமஹர்ஷி, பிரம்மசரிய விரதம் இன்னதென்பதைச் சொல்லுகிறார் :—

புருஷனை இழந்த விதவைகள் மோர், பால், தயிர், புசிக்கலாகாது. நல்மணம் மூக்கில் தாக்கலாகாது. நல்ல வஸ்திரங்களை உடுக்கக்கூடாது. அலங்காரம் செய்து கொள்ளலாகாது. பாட்டு கேட்கக்கூடாது. தாம்பூலம்

போட்டுக் கொள்ளக்கூடாது. புஷ்பங்களுக்குச் சமீபம் போகலாகாது. கட்டில் மெத்தைகள்மேல் படுக்கலாகாது. எண்ணெய் தேய்த்துக்கொள்ளலாகாது. வெந்நீர் உதவாது. வண்டி, பல்லக்குகளில் ஏறலாகாது. ஒருவர் மீது தயை பாராட்டலாகாது. புண்ணியகார்யங்களையும், சுபகார்யங்களையும் செய்யலாகாது. இவைகளைவற்றைச் செய்தாலும், பெற்றோர்களும், உறவினரும் தண்டிக்க வேண்டும். உப்பு, புளிப்பு, தித்திப்புப் பதார்த்தங்கள் உதவாது. பருப்பு சாப்பிடக்கூடாது. உவர்ப்பு, கசப்பு, காரபதார்த்தத்தை மட்டும் சாப்பிடலாம். அறுபது வயது அடைகிற வரையில், ஒருபொழுது, அதுவும் பாதி வயிறு, ஆகாரந்தான் புசிக்கவேண்டும்.

రండాపాకం సదా త్యాజ్యం ప్రవదంతి మనీషిణః॥

*ரண்டாபாகம் ஸதா த்யாஜ்யம் ப்ரவதந்தி மநீஷிண: ||*

என்று சொல்லியபடி விதவைகள் செய்த சமையலை எவரும் சாப்பிடலாகாதென்றும், இப்பேர்ப்பட்ட முடியாத, உப்பில்லாத கொடிய பத்தியநிலைமையை, மகரிஷி விதித்திருக்கிறார்.

இம்மகரிஷி சொன்ன ஸ்மிருதிகளின் கருத்தை ஆராய்ந்து பார்த்தால் அறுபது வயது வருமட்டும் உப்பில்லாத பத்தியமிருந்து அதுவும் அரைவயிறு சாப்பிட்டிருக்க எவரால்தான்முடியும்? புருஷனை இழந்து கொண்டவர்கள், துயரத்தைப் பொறுக்க முடியாமல் முந்திய ஜென்மத்தில் செய்த பாவத்தாலல்லவா தங்களுக் கிப்பேர்ப்பட்ட துரதிஷ்டம் வாய்ந்ததென்று கருதி, காசி, ராமேஸ்வரம், ஸ்ரீரெங்கம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போய், பகவானைத் தரிசித்து

நல்ல ஜன்மத்தை அடையவேண்டுமென்று நினைப்போர் வண்டியில் யாத்திரை செய்யாமல் நடந்துபோக இளம் கைம்பெண்களால் முடியுமா? தன் ஆத்மா நல்வழிப் படுவதற்கு ஈசுவர கைங்கர்யம் செய்யக்கருதி துளசி, வில்வம், புஷ்பம், முதலான மாலைகள் கட்டிக் கோயில் களுக்குக் கொடுத்துப்புண்ணியம் சம்பாதிப்போமென்று நினைப்போர் புஷ்ப்பங்களை அணுகாமல், மாலைகள் கட்ட முடியுமா? அப்புஷ்பங்களின் வாசனை இவர்கள் மூக்கில் ஏறாமலிருக்குமா? உப்பு பருப்பு, இனிப்பு, இல்லாமல் அன்னமல்லது கஞ்சியைக் குடித்து எக்காலத்தும் ஜீவித் திருக்க எவராலாகிலும் முடியுமா? இந்த அநுஷ்டானமா னது விதவைகளானவுடன் விபசார வழியிலிறங்காம லிருக்கும்படி சாஸ்திரங்களில் சொல்லியவண்ணம் மறு விவாகம் செய்துகொள்ளும் காலபர்யந்தமட்டும் சரீரத் தை ஒடுக்கி விரதத்தைக் காப்பாற்ற வேணுமென்று நீங் கள் தெரிந்துகொள்ளத்தக்கது. அவர் கருத்தில், விதவை கள் எக்காலத்தும் விதவை நிலையில் தானிருக்கவேண்டு மென்று நீங்கள்சொல்வீர்களானால், பகவான் எல்லோருக் கும் அருளியிருக்கும் ஆகாரம், நித்திரை, போகமென்கிற சுபாவ தர்மத்துக்கு மாறுட்டமுண்டாக மாட்டாதா? ஆகாரமும் நித்திரையும் ஒருவருக் கிருக்கும் காலமுழு தும் போக இச்சைமட்டும் போய்விடுமா!! ஆகையால், அவர் விதித்தது புனர் விவாகம் செய்து கொள்ளாமல் விதவை நிலையிலிருக்கும் காலபர்யந்தந் தானென்று எவரும் நன்றாய் அறியத்தக்கது.

சத்தியத்தை நாடும் சகோதரர்களே!

உலகத்திற் பெண்ணாய்ப் பிறந்து புருஷனை இழந்து ஆயுள் முழுவதும் மகரிஷி விதித்தபடி வருந்திக்கொண்

டிருப்பதைவிட, மரணமடைந்து விடுவது சுககர மாயிருக்கு மல்லவா? ஆகையாலல்லவா சிலராவது பூர்வ காலத்தில் உடன்கட்டை ஏறினதாகச் சொல்லப்படுகிறது. உடன்கட்டை ஏறுதல் மகா கொடிய செயலல்லவோ வென்று கருணையோடும் நம்மையாளும் துரைத் தனத்தார் இக்கொடிய வழக்கத்தை நிறுத்தி, சாஸ்திர சம்மதமான புனர்விவாகத்தை, வேதங்களைக் கசடறக்கற் றுணர்ந்த ஈசுவர சந்திர வித்தியாசாகர பண்டிதர் முதலானோருடைய பிரேரேபணத்தால் அங்கீகரித்தனர். எவ்வளவு கன்னெஞ்சர்களாயினும் ஒரு இளங்கைம் பெண், உடன்கட்டை ஏறும் காட்சியைக் கண்ணால் பார்க்கவுங்கூட மனம் துணிவார்களா? சகிக்க முடியுமா? நினைத்த மாத்திரத்தில் மனம் பதறு கின்றதே! நெஞ்சம் துடிக்கின்றதே! பூர்வகாலத்தும் எல்லா ஸ்திரீகளும் உடன்கட்டை ஏற மனதாரச்சம்மதித்தார்களென்று எங் கும் காணவில்லையே. பலவந்தத்தாலும் இம்சையாலும் அக்நியில் தள்ளப் பட்டார்களென்றே அறிய வேண்டி யிருக்கிறது. அக்கிநிப்பிரவேசம் செய்ய மனந்துணியாத உத்தம பிராமணனுடைய பத்திநியை நோக்கியல்லவா, பகவான் மறுவிவாகம் செய்துகொள்ளும்படிக்கட்டளை இட்டாரென்று வேதம் சொல்லுகின்றது.

ஓ ஜனங்களே! நீங்கள் இக்கொடிய செய்கையை ஆதரிக்க மாட்டீர்களென்று உறுதியாய் நம்புகிறேனா கையால் நான் விஸ்தரித்துச் சொல்லுவது அநாவசிய மாகும்.

இவ்வண்ணம் ஜீவகால முழுதும் விதவைகளாய் விட்ட உங்களரிய மக்களும், உடன் பிறந்தோரும், மரு மக்கள்மார்களும், இது அநுஷ்டிக்க முடியாத விருத

மென்றும் இந்தக் கொடிய விருதத்திலவர்களை வைப்பது இராட்சதச் செயலாகுமென்றும், உடன் கட்டை ஏறச்செய்தல் அதைவிடக் கொடியச் செயலென்றும் உங்கள் மனதிற் படுவது உண்மையானால், நீங்களேன் அவர்களுக்கு வேதசம்மதமான புனர்விவாகம் செய்துவைத்து, அவர்களை சுகித்திருக்கும்படிச் செய்யக் கூடாதென்று உங்களையான் கேட்கிறேன். புருஷர்களான நீங்கள்மட்டும் புனர்விவாகம் செய்துகொண்டு விதவை ஸ்திரீகளுக்குமட்டும் புனர் விவாகம் கூடாதென்று சொல்லும் பட்சத்தில் அக்கொடிய சொற்கள், உங்கள் பொறுமைக் குணத்தையும், கடின சித்தத்தையும் காட்டுமே யொழிய உங்கள் நற்குண நற்செய்கைகளைப் பிரதி பலிக்காது. உங்கள் வயிற்றிற் பிறந்த இளம் கைம்பெண்களுக்கே நீங்கள் இரக்கத்தையும் தயையையுங் காட்டாவிட்டால், எந்த முகத்தை வைத்துக் கொண்டு எங்கள் பாவத்தைப் போக்க வேண்டு மென்று ஈசுவரனை வேண்டிக்கொள்ளப்போகிறீர்கள்? வஞ்சநமன் வாதனைக்கும், வன்பிறவி வேதனைக்கும் நீங்கள் அஞ்சவேண்டுமென்று தான் யான்கேட்டுக் கோள்வதாகும்.

இத்யாதி காரணங்களால் விதவைகளாய் விட்ட ஸ்திரீகளுக்கு மறுவிவாகம் செய்து வைப்பது உத்தம காரிய மென்று உங்கள் அநுபவத்துக்குமே தெரியும். ஆகிலும்,

1 விதவைகளின் புனர் விவாகம் சாஸ்திரோக்தமா?

2. இத்திய வழக்கத்துக்கு மூதற்காரணமேது?

3. வெகுகாலமாய் அநுஷ்டித்துவந்த இந்த ஆசாரத்தை இக்காலத்தில் மாற்றிக்கொள்வதற்கு தர்மசாஸ்திரங்கள் சம்மதிக்குமோ? என்கிற சந்தேகங்கள் எவருக்கும் உண்டாகும். இதைப்பற்றிச் சிறிது சொல்லுவோம்.

1-வது கேள்வி சாஸ்திரோக்தமா :—

விடை :—பிராமண வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகிய அப்பய்ய தீக்ஷிதரும், Rai Bahadur வீரேசலிங்கம்பந்துலு அவர்களும் திருவிதாங்கோடு சதர் கோர்ட்டு வக்கீல் சேஷய்யங்கார் முதலிய அநேக வித்வான்களும் லோகோபகாரரான ஈசுவர சந்திர வித்தியாசாகர பண்டிதரவர்களும், விதவைகளின் புனர் விவாகம் சாஸ்திர சம்மதமான தென்றும், நான்கு யுகங்களிலும் விதவைகளின் புனர் விவாகம் நிராக்ஷேபனையாய் நடந்து வந்திருக்கிறதென்றும், தற்கால தானுஷ்டானம் கலியுகம் பிறந்தபின் தான் சிலரால் அநுஷ்டிக்கப்பட்டு வந்தாலும் ஆதிமுதலே மறுக்கப்பட்டு வருவதாகவும் சொல்லியிருக்கிறார்கள். வேத சுருதிகளும், ஸ்மிருதிகளும், புராணங்களும், மறுவிவாகத்தை அங்கீகரித்திருக்கின்றனவென்று மேற்சொன்னமகான்கள் கிரந்தங்கள் எழுதி யிருக்கின்றார்கள். அவர்களின் வாக்குறுதியே நமக்குப் போதுமானது. ஆகிலும் தெளிவாயிருக்கப்பட்ட சிலபிரமாணங்களை யான் சொல்லுகிறேன். எல்லாவற்றிற்கும் மேலான பிரமாணங்களென்றும் ஈசுவரனால் அருளப்பட்டதென்றும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கும் வேதத்தில்— சுருதி :

శ్రుతి॥ ఉదీర్ష్వ నార్యభిజీవ లోక మితాసు మేతముప శేషఏహి
హస్తగ్రాభస్య దిధిషో స్త్వ మేతత్పత్యుర్జనిత్వ మభిసంబభూవ.

உதீர்ஷ்வ, நார் யபிஜீவ லோக. மிதாஸுமேதமுபஸேஷஏஹி
ஹஸ்த க்ராபஸ்ய திதிஷோ ஸ்த்வ மேதத் பத்யு: ஜனித்வ
மபிஸம்பபூவ

என்று எஜுர் வேதம் தைத்திரி ஆரணியகம் ஆறுவது பிரபாடகம் 14-வது அநுவாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தன்கணவன் இறந்தபோது உடன்கட்டை ஏறுவதற்கு அவனுடைய மனைவி பயப்பட்டால் உடன்கட்டை ஏறச் சம்மதிக்காத அவளிடத்தில் பந்துக்கள் மேற்சொன்ன மந்திரத்தைச் சொல்லி அவளை அவ்விடத்தை விட்டு விலகும்படிச் செய்வேண்டுமென்று விதி ஏற்பட்டிருக்கிறது

| | | |
|---|---|---|
| నారి | ... | ஹே ஸ்திரியே! |
| ఇతాసుం | ... | இறந்துபோன |
| ఏతం | ... | இந்தப் பதியைப்பற்றி |
| ఉపశేషే | ... | சமீபத்தில் விழுந்து கிடக்கிருய். |
| ఉదీర్ష్వ | ... | (பதியைவிட்டு) எழுந்திரு! |
| జీవలోకమభి | ... | ஜீவித்திருக்குமவர்களைப்பார்த்து |
| ఏహి | ... | வருவாய்! |
| త్వం | ... | நீ |
| హస్తగ్రాభస్య | ... | பாணிக்கிரகணம் செய்துகொள்ளவும் |
| దధిషోః | ... | இரண்டாம்தடவை விவாகம் செய்துகொள்ள இஷ்டமுள்ளவனுமான పునర్వివాహేచ్ఛోః పత్యుః என்று வித்தியாரண்யரின் வியாசகியானம் |
| పత్యుః | ... | புருஷனுக்கு |
| ఏతత్ | ... | இப்போப்பட்ட |
| జనిత్వం | ... | பாரியாயிருக்கும் தன்மையை |
| అభిసంబభూథ | ... | அபிமுகத்தால் நன்றய் அடைவாய் |

இம்மந்திரத்தின் பொருள்: ஓ ஸ்திரீயே, உயிர்மரித்துப்

போன இந்தப்புருஷன்பேரில் ஏன் விழுந்து கிடக்கிறாய்! உயிரோடிருக்கும் மற்றவர்களைப் பார்த்து எழுந்து வருவாய். (உன்னை மறுமணம் செய்வதற்கு இஷ்டப்படும் புருஷனுக்கு நீ மனைவியாயிரு) என்று பொருள்படும் இம்மந்திரத்தை அப்பெண்ணின் கொழுந்தன் முதலானவர்கள் புருஷனை இழந்த ஸ்திரீயினிடத்தில் படித்து அவளைச்சமாதானம் செய்யவேண்டும்.

இது வெகு தீர்க்கமும் வெளிப்படையுமான முக்கிய வாக்கியம்—கவனிப்பு: இந்த சுருதி விசேஷ விதியாயும், விதிக்குரிய இலட்சணம் பொருந்தியதாயுமிருக்கிறது - ఉదీర్ష్వ- எழுந்திரு ఏహి - வாராய். జనిత్వం అభిసంబభూవ - பத்நி ஆகக்கடவாய் என்னும் ஏவல் வினைகள் அதைத் தெளிவாய்க் காட்டுகின்றன.

* புநர் விவாகத்தில் பாணிக்கிரகணம்பண்ண இஷ்டமுள்ள பதிக்கு நீ நேர்முகமாய் பத்னியாகக் கடவாய், என்பது கட்டளை.

இதின் மேலிட்ட மந்திரத்திலும் சொல்லியிருக்கும் சுருதி வாக்கியமாவது

శ్రుతి॥ ఇయం నారీ పతిలోకం వృణానా నిపద్యత ఉపత్వా
మర్త్య ప్రేతం, విశ్వం పురాణ మనుపాలయంతీ తస్యై
ప్రజాం ద్రవిణం చేహ దేహి॥

(சுருதி) இயம் நாரீ பதிலோகம் வ்ருணா நிபத்யத உபத்வா
மர்த்ய ப்ரேதம், விச்வம் புராண மநுபாலயந்தி
தஸ்யை ப்ரஜாம் த்ரவிணம் சேஹ தேஹி:

| | | |
|---|---|---|
| హేమర్త్య | ... | ஓ மனிதனே! |
| ఇయంనారీ | ... | இந்த ஸ்திரி [யும் லோகத்தை |
| పతిలోకం | ... | (இறந்துபோன)பர்த்தாவாகிய நீ அடை |

వృణానా ... கோரினவளாய்
ప్రేతం ... பிரேதமாயிருக்கும்
త్వా ... உன்
ఉప ... சமீபத்தில்
నిపద్యత ... விழுந்துகிடக்கிருள்
పురాణం ... பிராசீனமான பழைய
విశ్వం ... இவ்வுலகத்தை [ருள்
అనుపాలయంతీ ... அடைந்திருக்கக் கோரினவளாயிருக்கி
తస్యై ... அவளுக்கு
ప్రజాం ... சந்தானமும்
ద్రవిణంచ ... தனமும்
ఇహ ... இவ்வுலகத்தில்
దేహి ... நன்றயிருக்கும்படிச் செய்

இந்த மந்திரத்தின் பொருள்: - இறந்துபோன கணவனுடைய பிரேதத்தின்பேரில் மனைவி விழுந்து அழும்போது பிரேதத்தைப் பார்த்து இந்த மந்திரத்தை பந்துக்கள் படிப்பார்கள். இறந்துபோனவனே, உன்னுடைய மனைவி நீ போகும் லோகத்தைத்தான் அடைய வேண்டுமென்று பிணமாய்க் கிடக்கும் உன் சமீபத்தில் விழுந்துகிடக்கிருள். புராதீனமான இந்தப் பிரபஞ்சத்தின் தருமங்களை அநுசரிக்கவேண்டுமென்ற இச்சையும் கொண்டிருப்பதால் இவளுக்கு சந்தானமும், தனமும் விருத்தியடைந்து நன்ருயிருக்கும்படி நீ அருளவேண்டும்.

ருக்வேதம்:

శ్రుతి॥ ఏకస్య బహ్వ్యో జాయా భవన్తి
నైకస్యై బహవస్సహ పతయః॥

(சுருதி) ஏகஸ்ய பஹ்வோ ஜாயா பவந்தி
நைகஸ்யை பஹவஸ்ஸஹ பதய:||

இதின் பொருள்:—

ஒரு புருஷனுக்கு வெகு மனைவிகள் இருக்கலாம், ஆனால் ஏககாலத்தில் ஒரு ஸ்திரீக்கு அநேக புருஷர்கள் இருக்கலாகாதென்று சொல்லுவதால் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு பர்த்தாக்களிருக்கலாமென்று ஏற்படுகிறது.

శ్రుతి॥ సోమః ప్రథమో వివిదే। గంధర్వో వివిధ ఉత్తరః।
తృతీయో అగ్నిష్టేపతి। స్తురియస్తే మనుష్యజాః॥

(சுருதி) ஸோம: ப்ரதமோ விவிதே! கந்தர்வோவிவித உத்தர:
த்ருதியோ அக்நிஷ்டேபதி:! தூரீயஸ்தே மநுஷ்யஜ :

இதின் பொருள்:—"உன் முதலாம் பர்த்தா சந்திரன் என்று அறி, அவனுக்குப்பின், காந்தர்வன் உனக்குப் பதியானான்; அக்னி உன் மூன்றும் கணவன்; நரஜன்மிகள் உனக்கு நாலாம் புருஷர்களாயிருப்பார்கள்."

இவ்வாக்கியம் எட்டாம் அஷ்டகத்தில் வருகிறது. விவாக தருணத்தில் இதை ஜபிக்கிறார்கள். இதன்படி எந்தப்பெண்ணும் தொடர்பாய் மூன்று மனுஷாதீத ஜீவிகளுக்கும் பிற்பாடு மனுஜன்மிகளுக்கும் பத்நி ஆகிறாள். இதில் நரஜன்மிகள் என்று பன்மையில் சொல்லியிருப்பது மிக விசேஷமானது. அநேக மனுஷ பர்த்தாக்களுடன் நிகழும், தொடர்பான விவாகங்களுக்கு இதில் விதி அமைந்து நிற்கிறது.

శ్రుతి॥ కుహస్విద్దోషా। కుహావస్తో రశ్వినా। కుహాభిపిత్వం।
కరతః కుహోషతుః। కోవాంశయుత్రా। 'విధవేవ దేవరం'।

మర్యన్న యోషా కృణుతే సదస్థ ఆ॥

(ருக்வேதம் 8-ம் அஷ்டகம்)

(சுருதி) குஹஸ்வித்தோஷா, குஹவஸ்தோ ரஷ்விஞ,
குஹாபி பித்வம்,

கரத: குஹோஷது:, கோவாம் ஷயுத்ரா,
விதவே வதேவரம்.

மர்யன்ன யோஷா க்ருணுதே ஸதஸ்த ஆ,
ருக்வேதம் 8-ம் அஷ்டகம்.

பொருள்:—ஓ அசுவினி குமாரரே! இரவில் நீர் எங்கே தங்குகிறீர்? பகலில் நீர் எங்கே தாமதிக்கிறீர்? உமதிச்சைகள் திர்ப்தி அடைகிற இடமெங்கே? நீர் எங்கே வாசம் பண்ணுகிறீர்? சயனிப்புக்கு விதவை தன் இரண்டாம் கணவனை கவருகிறது போலவும் பாரி தன் பர்த்தாவைக் கருஷிக்கிறது போலவும் யாகம் செய்கிற எந்தப் புரோகிதன் உம்மை யாகத்திற்கு அழைக்கிறான். இவ்வாக்யம் ரிக்வேதம் 8-வது அஷ்டகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. விதவைகள் தங்கள் இரண்டாம் கணவரோடு கூடி வாழ்வது பூர்வ காலத்தில் சாதாரன பேச்சுகளில் வழங்கி வந்ததென்று இந்த திருஷ்டாந்தத்தால் விளங்குகிறது, மனைவியானவள் தன் பர்த்தாவின் ஆலிங்கனத்தில் மகிழ்வது எப்படி அபக்கியாதியல்லவோ அப்படியே விதவையின் புநர்விவாகத்தையும் அக்காலத்தார் எண்ணி வந்தார்கள் என்பதற்கு இது அத்தாட்சியாகும்.

యాపూర్వం పతిం విత్వాధాన్యం విందతే పతిం
పంచౌ దనంచతావజం, దదాతో నవియోషతః (27)

సమానలోకో భవతి, పునర్భువా పరః పతిః
యోజం పంచౌదనం దక్షిణాజ్యోతిషం దదాతి (28)

అను పూర్వ వత్సాం ధేను మనడ్వాహముప బర్హిణం
వాసో హిరణ్యం దత్వా తేయాంతి దివముత్తమమ్ (29)

அதர்வஸமிதை 9-ம் காண்டம் 5-ம் ப்ரபாடகம்.

யாபூர்வம் பதிம் வித்வா தான்யம் விந்ததே பதிம்
பஞ்சௌள தனம் சதாவஜம் ததாதோ நவியோஷத: (27)

ஸமான லோகோ பவதி, புனர்புவா பர: பதி:
யோஜம் பஞ்சௌளதனம் தக்ஷிணு ஜ்யோதிஷம் ததாதி (28)

அநுபூர்வ வத்ஸாம் தேநு மனட்வாஹமுப பர்ஹிணம்,
வாஸோ ஹிரண்யம் தத்வாதே யாந்தி திவமுத்தமம் (29)

இதின் பொருள்:—முதலாவது ஒரு பர்த்தாவை விவாகம் செய்திருந்து பின்பு வேறொருவனை இரண்டாம் பர்த்தாவாக விவாகம் பண்ணிக்கொண்டு அஜபஞ்சதம் செய்தால், அந்த தம்பதிகள் இணைபிரியாமலிருப்பரென்றும் ஷ அஜபஞ்சித விரதத்தோடு சூரிய தட்சணை கொடுத்தால் தம்பதிகள் ஒரே லோகத்தை யடைவர்களென்றும், கன்றுடன் கூடிய பசு, காளை, கட்டில், வஸ்திரம், பொன் முதலான தானங்களைச் செய்தால், உத்தம லோகத்தை அடைவரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

குறிப்பு:—புநர் விவாகம் செய்துகொள்வதற்கு இதைவிட ஈச்வரனுடைய உறுதியான கட்டளைகள் நமக்கென்ன வேண்டும். இவ்வண்ணம் வேத சுருதிகள் புனர் விவாகத்தை விதிக்கின்றன வென்றும் விதவோ விவாகிதயைக் கைவிடாமல் பத்தினி என்று ஒப்புக்கொள்ள வேண்டுமேன்று விதித்திருக்கின்றன வென்றும் தெளிவாயிருக்கின்றது.

குறிப்பு:—வேத சுருதிகள் நித்திய நிர்தோஷமான ஸ்வத:பிரமாணங்களாகும். அதாவது வேதங்கள் அநாதி, தோஷமற்றவை - அதற்கு மேலிட்ட பிரமாணங்கள் கிடையா - ஈசுவரனது திருவாக்கே யாகையால் நிராக்ஷேபனையான கட்டளை. இதை ரிஷிகளாகட்டும், முநிகளாகட்டும் எவரும் மறுக்கலாகாது. மறுத்துச் சொன்னவர்கள் வாக்குச் செல்லத்தக்கதல்ல - ஏன் அப்படி சொல்லவேண்டுமென்பதற்கு பிரமாணம்.

శ్లో॥ శృతి స్మృతి విరోధేతు శృతి రేవగర్యయసి
అవిరోధే సదాకార్యం స్మార్తం వైదికవత్సదా॥

(சுலோ) ச்ருதி ஸ்ம்ருதி விரோதேது ச்ருதிரேவ கரீயஸி
அவிரோதே ஸதாகார்யம் ஸ்மார்த்தம் வைதிகவத்ஸதா||

சுருதிஸ்மிருதிகளுள் விரோதித்தால், சுருதியேகௌரவிக்கத்தக்கதென்றும், சுருதியை ஒத்திருந்தால், ஸ்மிருதியும் ஆதரிக்கத்தக்கதென்றும், ஜாபாலிருஷி சொன்னார்.

శ్లో॥ ధర్మం చజ్ఞాతుమిచ్ఛంతాం-ప్రకృష్ట ప్రమాణం శ్రుతిః
ప్రకర్ష బోధనేనచ శ్రుతి స్మృతివిరోధే స్మృత్యర్థో నాదరణీయః

தர்மஞ்சஜ்ஞாது மிச்சந்தாம் ப்ரக்ருஷ்ட பிராமணம் சுருதி:
ப்ரகர்ஷ போதநே நச ச்ருதி ஸ்ம்ருதி விரோதே
ஸ்ம்ருத்யர்த்தோ அநாதரணீய:

தர்மத்தை தெரிந்துக்கொள்ள இச்சையுள்ளவர்களுக்கு சுருதிகளே மேலான பிரமாணங்களென்றும், சுருதிக்கு விரோதமாயிருக்கப்பட்ட ஸ்மிருதியின் பொருள் ஆதரிக்கத்தக்கதல்லவென்றும் கல்லூகபட்டு என்கிற வியாக்கியான கர்த்தா சொன்னார். இவ்விதமாகவே மீமாம்ஸ சாஸ்திரத்திலும் ஜெய்மினி மகர்ஷியாலும் எழுதப்பட்டிருக்கிறது.

ஆனல் ரிஷிகள் முதலானவர்கள் அருளிய ஸ்ம்ருதிகளால் பிரயோஜன மில்லையோ வென்றால் அப்படி சொல்லத்தகாது. ஏனெனில்

శ్లో॥ శృతి స్మృతీమమైవాజ్ఞే యస్తే ఉల్లంఘ్య వర్తతే
ఆజ్ఞాఛేదిమమద్రోహి, నవధ్యోనాత్రసంశయః

சுலோகம்:

ச்ருதி ஸ்மிருதி மமைவாஜ்ஞே யஸ்தே உலங்க வர்த்ததே
ஆஜ்ஞா சேதிமமத்ரோஹி, நவத்யோ நாத்ரஸம் ஷய: ||

சுருதிகள், ஸ்மிருதிகள் என்னுடைய (பகவானுடைய) கட்டளையாகையாலே அவைகளை உதாசீனம் பண்ணிநடப்பவன் என்னுடைய துரோகியாய், சம்சயமற்று தண்டிக்கப் படுவானென்று பகவத்கீதை முதலான சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. ஆனல் ஸ்மிருதிகளை எப்படி அறியத்தக்கதெனில்

శ్లో॥ యదదృష్టం హివేదేషు తద్దృష్టవ్యం స్మృతౌకిల
ఉభాభ్యాం యదద్రష్టమ్తు తత్పురాణేషు పఠ్యతే॥

சுலோகம்.

யத்தத்ருஷ்டம் ஹிவேதேஷு, தத்ருஷ்டவ்யம் ஸ்ம்ருதௌகில
உபாப்யாம் யதத்ருஷ்டம்து, தத்புராணேஷு பட்யதே ||

வேதங்களில் எது காணப்படவில்லையோ அதை ஸ்மிருதிகளில் காணத்தக்கவை யென்றும் இவை இரண்டிலும் காணப்படாதவை புராணங்களில் சொல்லப்படுமென்றும் ஆபஸ்தம்ப சூத்திரகாரகர் சொன்னர்.

శ్లో॥ ధర్మజిజ్ఞా సమానానాం ప్రమాణం ప్రథమం శ్రుతిః
ద్వితీయం ధర్మశాస్త్రంతు

சுலோகம்.

தர்மஜிஞ்யா ஸமாஞணும் பிரமாணம் ப்ரதம் சுருதி.

த்விதீயம் தர்மசாஸ் த்ரந்து ||

தர்மங்களை நிரூபிக்கப்பட்டவர்களுக்கு முதல் பிரமாணம் வேத சுருதிகளென்றும், இரண்டாவது ஸ்ம்ருதிகளென்றும் பாரத அநுசாஸந பர்வத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

శ్లో|| శ్రుతి స్మృతి పురాణేషు విరుద్ధేషు పరస్పరం

పూర్వం పూర్వం బలీయః

சுலோகம்.

ச்ருதி ஸ்ம்ருதி புராணேஷு விருத்தேஷு பரஸபரம்

பூர்வம் பூர்வம் பலியா.

சுருதி ஸம்ருதி பிரமாணங்களில் ஒன்றுக்கொன்று விரோதிக்கும் பட்சத்தில், புராணத்தைவிட ஸ்ம்ருதியும் ஸ்ம்ருதியைவிட சுருதிகள் வலுத்தவை யென்றும் ஆபஸ்தம்ப சூத்திரகாரகர் சென்னர்.

ஆகையால் யான்மேலே சொன்ன ஈசுவரனது திருவாக்கியங்களாகிய ஒப்பு உயர்வற்ற சுருதிகளே புநர்விவாக தர்மத்தை அங்கீகரித்திருக்கின்றன என்பதற்குப் போதுமான அத்தாட்சியாகுமென்று ஒவ்வொருவரும் கருதுவீர்கள். தவிர புநர்விவாகம் கூடாதென்றதெளிவான வாக்கியம் ஒன்றுகூட சுருதிகளில் கிடையாதென்று லோகோபகாரர்களான ஈசுவர சந்திர வித்தியாசாகர பண்டிதரும், ராய் பகதூர் வீரேசலிங்கம் பந்துலு, முதலான மகாவித்வான்கள் எழுதியிருக்கிறார்கள்.

శ్లో|| జ్ఞాన శక్తి బలైశ్వర్య వీర్య తేజాంస శేషతః

భగవచ్ఛబ్ద వాచ్యాని

சுலோகம்.

ஜ்ஞான சக்தி பலைச்வர்ய வீர்ய தேஜாம்ஸ சேஷத :
பகவச்சப்த வாச்யானீ. என்றபடி

ஸர்வேசுவரன் பரிபூரண ஞான சொரூபியாகை யால் அவர் திருவாக்கு முரண்படும்படி அவரே விதித்திராரென்றும் அவர் வாக்குக்கு எதிர் வாக் கில்லை யென்றும் நீங்களே எதிர் வாதிகளுடன் வாதம் செய்வீர்களென்று நம்புகிறேன்.

---

இனி ரிஷிகள் முதலானவர்களாலருளப்பட்ட ஸ்மிருதிகளைப்பற்றி ஆராய்வோம். வேதங்களில் எல் லா தர்மங்களைப்பற்றிச் சொல்லாமலிருப்பதாலும், கால பேதங்களைப்பற்றி அவ்வவ் யுகங்களுக்கு வெவ்வேறான விசேஷ தர்மங்கள் வேண்டி வருமாகையாலும், அவ் வவ் யுகங்களுக்கு விசேஷ தர்மங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

శ్లో॥ అన్యే కృతయుగే ధర్మాస్త్రేతాయాం ద్వాపరేపరే
అన్యే కలియుగేనౄణాం యుగహ్రాసానురూపతః॥

சுலோகம்.

அந்யே க்ருதயுகே தர்மா’த்ரேதாயாம் த்வாபரேபரே
அந்யே கலியுகேந்ருணும், யுகஹ்ராஸாநு ரூபத : ||

என்ற பிரஹஸ்பதி வசனப்படி யுகங்களை அநுஸரித்து கிரேதயுகத்திற்கு தர்மங்கள் வேறென்றும், திரேதைக்கு தர்மங்கள் வேறென்றும், த்வாபரத்துக்கு வேறென்றும் இந்தக் கலியுகத்துக்கு தர்மங்கள் வேறென்றும், தெரி கிறபடியால், ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருககும் தர்மங்களெல்லாம் ஒவ்வொரு யுகத்திலும் அநுஷ்டிக்க வேண்டிய அவசியமில்லை யென்றும், தனியாய் எந்த யுகத்துக்கு எந்த ஸ்மிருதி ஏற்படுத்தப் பட்டனவோ,

அந்த யுகத்திற்கு அந்த ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கும் தர்மங்களே பிரதானங்களென்றும், அதற்கநுகூலமாயிருக்குமவைகளையே, மற்ற பூர்வயுக ஸ்மிருதிகளிலிருந்து கிரகிக்க வேண்டுமென்றும் தெளிவாகிறது.

பூர்வயுகங்களில் அநேக ரிஷிகள் ஸ்மிருதிகளை எழுதியுள்ளார். அவர்கள் மநு, நாரதர், வஸிஷ்டர், சாதாதபர், காத்யாயனர், யாஜ்ஞுயவல்க்யர் முதலானவர்கள். ஆயினும்

శ్లో॥ వేదార్థో పనిబద్ధత్వాత్ ప్రాధాన్యంతుమనోః స్మృతం
మన్వర్థ విపరీతాయాసా స్మృతిర్న ప్రశస్యతే॥

(சுலோ) வேதார்த்தோ பனிபத்தத்வாத் பிராதா நந்துமநோ: ஸ்ம்ருதம்
மந்வர்த்த விபரீதாயாஸா ஸ்ம்ருதிர்நப்ரஷஸ்யதே॥

என்கிற ஆபஸ்தம்பர் வசனப்படி எல்லா ஸ்மிருதிகளிலும் மேலானது மநுஸ்மிருதிகளாகையால் மநுஸ்மிருதிகளுக்கு விசேஷ கௌரவமுண்டு.

இனி எந்த யுகத்திற்கு எந்த ஸ்மிருதிகள் பிரதானமென்றுவிசாரிக்குமிடத்து

శ్లో॥ కృతేతు మానవా ధర్మా స్త్రేతాయాం గౌతమ స్మృతాః
ద్వాపరే శాంఖలిఖితాః కలౌ పారాశరస్మృతాః॥

(சுலோகம்)
க்ருதேதுமா நவா தர்மா த்ரேதாயாம் கௌதம ஸ்ம்ருதா:
த்வாபரே சாங்கலிகிதா: கலௌபாராசரஸ்ம்ருதா:॥

என்கிற பிரஹஸ்பதி பாராசருடைய வசனத்தால், க்ருதயுகத்தில் மநுஸ்மிருதிகளும், திரேதைக்கு கௌதமஸ்மிருதிகளும், துவாபரத்துக்கு சாங்கலிகிதஸ்மிருதிகளும்

கலியுகத்திற்கு பராசர மகரிஷியின் ஸ்மிருதிகளும் பிரதானங்களென்று தெரிகிறது.

மேற்சொன்னவைகளை நன்றாய்க் கவனத்தில் வைத்துக்கொண்டு, முதலில் விதவைகளின் விவாகத்துக்கு சம்மதம் கொடுக்கிற நான்கு யுகங்களுக்கும் ஸமானமாயிருக்கும் ஸ்மிருதி வாக்கியங்களைப்பற்றி யோசிப்போம்.

శ్లో॥ నష్టేమృతే ప్రవ్రజితే క్లీబేచ పతితే పతౌ।
పంచస్వాపత్సు నారీణాం పతిరన్యో విధీయతే॥

நஷ்டே ம்ருதே ப்ரவ்ரஜிதே க்லீபேச பதிதே பதௌ
பஞ்சஸ் வாபத்ஸு நாரீணாம் பதிரந்யோ விதீயதே.

மநு விதிக்கிறதாவது:—ஐந்துவித ஆபத்துக்களில் ஸ்திரீக்கு வேறொரு பதியை விதிககிறோம். புருஷன் தேசாந்திரம்போய் அவனைப்பற்றிய சங்கதி தெரியாமற் போய்விட்டாலும், பர்த்தா மரணமடைந்து விட்டாலும் சந்நியாசியாய்விட்டாலும், அலியாய்விட்டாலும், சுய ஜாதியை விட்டுவிட்டாலும், இவ்வைந்து ஆபத்துகளில் ஸ்திரீகள் மறுவிவாகம் செய்து கொள்ளலாம்.

இது வெகு தீர்க்கமான வாக்கியம்:—இக்காலத்தில் இவ்வாக்கியத்தை அச்சாஸ்திரத்திலிருந்து மறைத்துவிட்டார்கள். ஆயினும் மாத்வாசாரியர் அதை மநுதர்ம சாஸ்திரத்திலிருந்து எடுத்து எழுதியதாக ஒப்புக்கொண்டிருப்பதாலும், மநு ஸ்மிருதிகளின் சங்கிரகமாகிய நாரதருடைய ஸ்மிருதியில் அதே வாக்கியம் காணப்படுகிறதாலும் எல்லோருமதை மநுவின் வாக்கியமென்று ஒப்புக்கொள்ளுகிறார்கள் - தவிர

ప్రోషితో ధర్మకార్యార్థం ప్రతీక్ష్యోష్టౌ నరస్సమాః
విద్యార్థం షడ్యశోర్థంవా కామార్థం త్రీంస్తు వత్సరాన్॥

ப்ரோஷிதோ தர்மகார்யார்த்காம் ப்ரதீக்ஷ்யஷ்டேநரஸ்ஸமா
வித்யார்த்தம்ஷட்யஷோர்தம்வாகாமார்த்தம்த்ரீம்சுவத்ஸரின்

பர்த்தாவானவன் தர்மகாரியமாய் தேசாந்திரம் போயிருந்தால் 8 வருஷமும், வித்தையின் பொருட்டானல் 6வருஷமும், கீர்த்தி அடையவேண்டுமென்ருவது, காம இச்சையின்பொருட்டாலுமானல், மூன்று வருஷமும், பொறுத்திருக்கவேண்டுமென்று மேற்சொன்ன மநுவின் சுலோகத்தால் தெரிகிறதே தவிர, பிந்தி பாரியானவள் என்ன செய்யவேண்டுமென்று எவ்விடத்திலும் சொல்லவில்லை யாகையால், இந்த சுலோகத்துக்கு முந்தி "நஷ்டேம்ருதே" என்கிற சுலோக மிருந்திருக்குமென்பது தெளிவாய்த் தெரிகிறது. அவ்வாக்கியத்தின்படி மறுவிவாகம் செய்துகொள்ளலாமென்று அவ்விஷயம் முடிவடையும். இவ்வண்ணம் ஸ்ரீநந்தன் என்னும் வியாக்யான கர்த்தா பொருள்படுத்தினர். இதனல் இந்த முக்கிய வாக்கியத்தை யாரோ, தம்பொய்க் கட்சியை ஸ்தாபிக்கவேணுமென்று மறைத்துவிட்டார்களென்று தெளிவாகிறது.

குறிப்பு:—வேத சுருதிகளில் மரணமடைந்த புருஷனுடைய பத்நியை நோக்கி புநர் விவாகம் செய்துகொள்ளும்படி பகவான் கட்டளையிட்டிருக்கிருராயினும், மேற்சொன்ன இதர நான்கு ஆபத்துகளும் மரணத்துக்குச் சமானமாகவே விவாக பந்தசத்தை வியர்த்தமாக்குவதால் மநுதர்ம கர்த்தா, மரணத்தோடு இதர நான்கு ஆபத்துகளையும் ஒருமித்திருக்கிருரென்று தெளிவாகிறது.

సాచే దక్షత యోనిః స్యాద్గతప్రత్యాగతాపివా
పౌనర్భవేన భర్త్రాసా పునస్సంస్కార మర్హతి॥

ஸாசே தக்ஷத யோநி: ஸ்யாத்கதப்ரத்யா கதாபிவா
, பௌனர்பவேன பர்த்ராஸா, புனஸ்ஸம்ஸ் கார மர்ஹதி

விதவையாய்விட்ட ஸதிரீ அல்லது பர்த்தாவால் கை விடப்பட்ட ஸ்திரீ வேருெருபுருஷனேடு சம்யோகமில் லாமல் அக்ஷதயோனியாய் திரும்பி வருவாளேயானல் இரண்டாம்தாம் விவாக கருமம் நடப்பித்து சேர்த்துக் கொள்ளும் பர்த்தாவுக்கு யோக்கியதையுள்ளவளாகிருள் என்று இந்த மநுவசனத்துக்கு அர்த்தமாகும்.

క్షతా సంస్కారా త్ప్రాగేన పురుష సంబంధ దూషితా॥

க்ஷதா ஸஸ்ஸ்காரா த்ப்ராகேன புருஷ ஸம்பந்த தூஷிதா.

என்கிற மிதாக்ஷாருடைய வசனத்தின்படி புநர் விவாகத் துக்கு முன்னடியே புருஷ ஸம்போகத்தால் தோஷ மடைந்த ஸ்திரீ க்ஷதயோனி எனப்படுவாள். அப் பேர்ப்பட்ட புருஷ ஸம்போகத்தை யடையாதவள் அக்ஷதயோனி எனபபடுவாள் என்று வியக்தமாய் சொல்லப்பட்டதிலிருந்து விபசாரத்தாலாகிய அசுத் தக்கலவியையே சாஸ்திரம் தடுக்கிறதே தவிர

వైవాహికోవిధిః స్త్రీణాం సంస్కారో వైదికః స్మృతః॥

வைவாஹி கோவிதி: ஸ்தரீணும் ஸம்ஸ்காரோ வைதிக ஸ்ம்ருத:

என்கிற மநுவசனப்படி ஸ்திரீகளின் விவாகம் ஸம்ஸ் காரமெனப்படும். அதாவது சாஸ்த்ரோக்தமும் வைதிக மானது மானகிரியை என்று பொருள்படும்.

யாஜ்ஞவல்க்யர் ஸ்மிருதியில்

అక్షతా చ క్షతా చైవ పునర్భూ సంస్కృతా పునః।

அக்ஷதாச க்ஷதாசைவ புநர்பூ ஸம்ஸ்க்ருதாபுந:

என்று அக்ஷதயோனியானாலும் க்ஷதயோனி யானாலும் கூட. மறுவிவாகியின் விவாகத்தை அங்கீகரித்திருக்கிறார்

**நாரதர்**

శ్లో॥ నష్టేమృతే ప్రవ్రజితే క్లీబేచ పతితే పతౌ
పంచస్వాపత్సు నారీణాం పతిరన్యో విధీయతే॥

நஷ்டே ம்ருதே ப்ரவ்ரஜிதே க்லீபேச பதிதே பதௌ
பஞ்ச ஸ்வாபத்ஸு நாரீணாம் பதிரந்யோ விதீயதே.

மேற்சொன்ன மநுவின் வாக்கியமே நாரதர் ஸ்மிருதியிலும் வருகிறது. இந்த ஐந்து ஆபத்துகளில் "நஷ்டே" என்கிற ஆபத்தும் "க்லீபேச" என்கிற ஆபத்தும் தவிர மற்றவை ஆரம்பிக்கும் காலம் திட்டமாகையாலும், மேற்சொன்ன இரண்டு ஆபத்துகளுக்கு காலநிட்சயம் இல்லையாகையாலும், அந்தக்கால வரையை நிர்ணயிப்பதற்காகவும் மேற்சொன்ன "நஷ்டேம்ருதே" சுலோகம் "வாக்குதத்தா" பரமென்றும் "நியோக" பரமென்றும் விருதாவன வாதம் செய்பவரை சமாதானப்படுத்தும்பொருட்டும் அடியிற்கண்டவாக்கியங்களைச் சேர்த்து எழுதியுள்ளேன்.

అష్టౌ వర్షాణ్యుపేక్షేత బ్రాహ్మణీ ప్రోషితం పతిమ్
అప్రసూతా తు చత్వారి పరితోన్యం సమాశ్రయేత్॥

క్షత్రియా షట్సమాస్తిష్ఠే దప్రసూతా సమాత్రయం
వైశ్యా ప్రసూతా చత్వారి ద్వైవర్షే త్వితరా వసేత్॥

నశూద్రాయాః స్మృతః కాల ఏషప్రోషితయోషితాం
జీవతి శ్రూయ మాణేతు స్యాదేష ద్విగుణో విధిః॥

அஷ்டா வர்ஷா ண்யபேக்ஷேத ப்ராம்ஹணீ
ப்ரோஷிதம் பதிம்
அப்ரஸூதா து சத்வாரீ பரிதோன்யம் ஸமாஶ்ரயேத்॥

க்ஷத்ரியா ஷட்ஸமாஸ் திஷ்டே தப்ரஸூதா ஸமாத்ரயம்
வைஷ்யாப்ரஸூதா சத்வாரி த்வேவர்ஷே த்விதராவஸேத்॥

நஶூத்ராயா: ஸ்ம்ருத: கால ஏஷப்ரோஷித யோஷிதாம்
ஜீவதி ச்ரூய மாணே து ஸ்யாதேஷ த்விகுப்ணோவிதி.॥

| | | |
|---|---|---|
| புருஷன் தேசாந்திரம் போயவிட்டானுகில் ஒரு பிராமண ஸதிரீ சந்தானமுள்ளவளானுல் | .... 8-வருஷமும் | |
| சந்தானம் அற்றவளானுல் | ... 4 | ,, |
| க்ஷத்திரிய ஸ்திரீயானுல் சந்தானமுள்ளவள் | 6 | ,, |
| சந்தானமற்றவள் | ... 4 | ,, |
| வைசிய ஸ்திரி சந்தானமுள்ளவளானுல்... | 4 | ,, |
| சந்தானமற்றவள் | ... 2 | ,, |

காத்திருந்து விவாகம் செய்துகொள்ளலாமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. சூத்திர பத்நிக்கு காலவரை குறிப்பிடவில்லை.

மேற்சொன்ன வாக்கியங்களால் சந்தானமுள்ளவர்களும் இல்லாத ஸ்திரீகளும் புநர் விவாகம் செய்துகோள்ளலாயென்று வெளிப்படையாயிருக்கிறதல்லவா?

சந்தானமுள்ளவர்களுக்கு நியோகம் வேண்டாமை யாலும் வாக்குத்தத்தமட்டும் கொடுபட்ட பெண்மக்களுக்கு சந்தானம் உண்டாவது அசந்தர்ப்பமாகையாலும் எதிர்வாதிகளின் ஆக்ஷேபனை செல்லத்தக்கதல்ல. ஆகையால் ''நஷ்டேம்ருதே'' என்கிற சுலோகம் ஸ்திரீகளின் புநர் விவாகத்தைப்பற்றியதே என்று சொல்வதற்குச் சிறிதும் சந்தேகமில்லை.

தவிர, சில எதிர்வாதிகள் ''நஷ்டேம்ருதே'' சுலோகத்தில் ''பதி'' என்றபதம் இரட்டித்து வருவதால் ஒருவனை விவாகம் செய்துகொண்ட பதி என்றும் மற்றொரு பதி சப்தம் வெறும் காவலன் என்றும். பிரயோஜனமற்ற வாதம்செய்வதுண்டு. நாரதர், யமர், வசிஷ்டர், பிரகஸ்பதி முதலானவர்கள் எழுதியிருக்கிறதாவது. மணவாளன் கையில் நீர் வார்த்ததினாலும், வாயின் வார்த்தையாலாகிய தானத்தாலும், மணவாளன் கன்னிகைக்குப் பதியாகாமல், பாணிகிரகணத்துக்குப்பின் மணவாளனும் மணவாட்டியும், ஒருமித்து வைக்கும் சப்தபதி சடங்கின் ஏழாம் அடியிலே தான் ''பதி'' யாகிறானென்று சொல்லியிருக்கிறார்கள்.

శ్లో॥ నోదకేన నవావాచా కన్యాయాః పతిరుచ్యతే
పాణిగ్రహణ సంస్కారాత్ పతిత్వం సప్తమేపదే॥

நோதகேன நவாவாசா கன்யா யா: பதிருச்யதே
பாணிக்ரஹண ஸம்ஸ்காராத் பதித்வம் ஸப்தமேபதே.

శ్లో॥ నోదకే నవాచావా కన్యాయాః పతిరుచ్యతే
పాణిగ్రహణ సంస్కారో నియతం పతిలక్షణం॥

நோதகே நவாசாவா கன்யாயா: பதிருச்யதே
பாணிக்ரஹண ஸாஸ்காரோ நியதம் பதிலக்ஷணம்.

என்கிற பராசர வசனப்படி பாணிக்கிரகணம் செய்தவனே பதியாவான் என் கையால், "நஷ்டேம்ருதே" வாக்கியத்தில் சொன்ன இரண்டுபதி சப்தங்களும் பாணிக்கிரகணம் செய்துகொண்ட சரியான பதியையே குறிக்குமென்று தெளிவாகிறது.

శ్లో॥ ఈర్షా దండా దయోన్యేచ చత్వార స్సము దాహృతాః
త్యక్త వ్యాస్తే పతితవత్ క్షతయోన్యా అపిస్త్రియా॥

ఆక్షిప్త మోఘబీజానాం కృతేపి పతికర్మణి
పతిరన్యః స్మృతో నార్యా వత్సరార్థం ప్రతీక్ష్యతు॥

ஈர்ஷா தண்டா தயோந்யேச, சத்வாரஸ்ஸமு தாஹ்ருதா:
த்யக்த வ்யாஸ்தே பதிதவத் க்ஷதயோன்யா அபிஸ்த்ரியா||

ஆக்ஷிப்த மோக பீஜாநும் க்ருதேபி பதிகர்மணி
பதிரன்ய: ஸ்ம்ருதோ நார்யா வத்ஸரார்தம் ப்ரதீக்ஷ்யது||

பதிகள் நபுஞ்சக வகையில் முதல் நாலு வகைகளை சேர்ந்தவர்களானல் பத்நிகள் அவர்களோடு சம்யோகம் செய்திருந்தபோதிலும் அவர்களை விட்டு விலக வேண்டும். "ஆக்ஷிப்தம்" "மோகபீஜம்" என்னும் இருவகை நபுஞ்சகத்தையுடையவர்களானல் அவர்களுடைய பத்நிகள் அவர்களோடு கூடி வாழ்ந்திருந்தபோதிலும் ஆறுமாச பரீட்சைக்குபின் வேறு பதிகளை அடையலாம்.

மேற்சொன்ன வாக்கியங்களால் தன் முதல் பர்த்தாவோடு சம்யோகம் செய்திருந்தபோதிலும், வேறு பதிகளை அடையலாமென்றும், அவர்கள் நிந்தனைக்குட்பட்ட அசுத்த கலவி அல்லது விபசார தோஷத்தாலுண்டா

கும் க்ஷதயோனிகளாகமாட்டார்களென்றும் விளங்குகிறது.

ఉద్వాహి తాపియాకన్యా నచేత్సం ప్రాప్త మైథునా
పునస్సంస్కారమర్హేత యథాకన్యా తథైవసా॥

உத்வாஹி தாபியாகன்யா நசேத்ஸம் ப்ராப்த மைதுனா
புநஸ்ஸம்ஸ்கார மர்ஹேத யதா கன்யா ததைவஸா

விவாகம் செய்துகொண்டவளாயினும் புருஷனுடைய சம்யோகமில்லாதவளானால் மறுவிவாகத்துக்கு பாத்ரமானவள். அவள் அவிவாகித கன்னிகைக்கு சமானமானவள்.

வஸிஷ்டர்.

పాణిగ్రాహే మృతేబాలా కేవలం మంత్ర సంస్కృతా
సాచేదక్షత యోనిస్స్యాత్ పునస్సంస్కారమర్హతి॥

பாணி க்ராஹே ம்ருதேபாலா கேவலம் மந்த்ர ஸம்ஸ்க்ருதா
ஸாசே தக்ஷதயோ நிஸ்யாத் புநஸ்ஸம்ஸ்கார மர்ஹதி.

மந்திர ஸம்ஸ்காரத்தினால் மாத்திரம் விவாகம் முடிந்து அக்ஷதயோனியான பாலைப்பத்தினி பர்த்தாவின் மரணத்துக்குப்பின் புநர் விவாகத்துக்கு யோக்கியதையானவள்.

కులశీల విహీనస్య షండాది పతితస్యచ
అపస్మారీ విధర్మస్య రోగిణాం వేషధారిణాం
దత్తామపి హరేత్కన్యాం సగోత్రోఢాం తథైవచ॥

குலசீல விஹீநஸ்ய ஷண்டாதி பதிதஸ்யச
அபஸ்மாரீ வித்தர்மஸ்ய ரோகிணாம் வேஷதாரிணாம்
தத்தாம்பி ஹரேத்கன்யாம் ஸகோத்ரோடாம் ததைவச.

பர்த்தா நீசகுடும்பத்தானாய், சிலவிகீனனாய், நபுஞ்சகனாய், பதிதனாய், காக்காய் வலிகொண்டவனாய், தீர்க்க ரோகியாய், கூத்தாடியாய், ஏககோத்திரனாயிருந்தால், கன்னிகையானவள் விவாகம் முடிந்தவளாயிருந்தாலும் அவனைவிட்டுப் பிரிக்கப்பட்டு வேறேநவனுக்கு விவாகம் செய்யப்படத்தக்கவள்

காத்தியாயனர்

సతుయద్యన్య జాతీయః పతితః క్లీబఏవచ
వికర్మస్థ స్సగోత్రోవా దాసో దీర్ఘామయోపివా
ఊఢాపి దేయా సాన్యస్మై సప్రావరణ భూషణా॥

ஸதுயத்யன்ய ஜாதீய: பதித: க்லீபஏவச
விகர்மஸ்த ஸகோத்ரோவா தாஸோதீர்க்கா மயோபிவா
ஊடாபி தேயா ஸாந்யஸ்மை ஸப்ராவரண பூஷணா.

பர்த்தா அங்கியஜாதீயானாய், பதிதனாய், நபுஞ்சகனாய், துர்க்குணனாய், ஏககோத்திரனாய், அடிமையாய்த், தீர்க்க ரோகியாய், இருந்தால் கன்னிகையானவள் விவாக கர்மம் நிறைவேறினவளாயிருந்தபோதிலும் வஸ்திராபரணங்களோடு வேறேநவனுக்கு வாழ்க்கைப் படத் தகுதியானவள்.

இவ்வாக்கியம் மிக விசேஷமானது, யாவரும் நன்றாய்க கவனிக்கத்தக்கது. தீர்க்கரோகம்கொண்ட பர்த்தா பாரியின் இரண்டாம் விவாகத்துக்கு இடையூறல்லவானால் இறந்துபோன பர்த்தா தன் பதநியை அவள் ஜீவாந்தமளவும் விதவையாயிருக்கும்படிச்செய்ய எப்படி பாத்தியப்பட்டவன்? ஆகையால்,

விதவையாய்விட்ட ஸ்திரீ அவள் ஆயுள் பரியந்தம் விதவை நிலையில்தான் இருக்கவேண்டுமென்று போராடும் கட்சிக்கு ஆதாரமில்லையல்லவா?

ஒருதடவை தத்தம் செய்யப்பட்டு போனவள் மறுபடியும் புநர் விவாகத்துக்குத் தத்தம்செய்து கொடுக்கப்பட பாத்தியதையற்றவள் என்னும் கட்சிக்கும் ஆதாரமில்லையல்லவா?

இவைபோன்ற வசனங்கள் பிரஜாபதி ஸ்மிருதியிலும் காணப்படுகின்றன. வெவ்வேறான எட்டு தர்ம நூல்கள் அடியிற் குறிப்பிட்ட பதினேழு கஷ்டாவஸ்தைகளில் பாலவிதவைகளுக்கு புநர்விவாகம் சம்மதிக்கிறது. அவைகளெல்லாம் புநர்விவாகத்துக்கு ஒரே நியாயத்தைக் காட்டாதிருந்தாலும், மரணகஷ்டத்தை வெளிப்படையாக ஐந்து நூல்களும் அர்த்தாபத்தியாய் மற்ற நூல்களும் காட்டுகின்றன.

இரண்டாம் விவாகத்தை சம்மதிக்கிற 17 ஆபத்துகளாவன:—

1. பதியின் பரவசம். 2. மரணம். 3. சந்நியாசம் 4. நபுஞ்சகம் 5. பதிதம். 6, பதியினால் கைவிடப்படுதல் 7. விதவையின் பாலியம் 8. நீசகுடும்ப பர்த்தா 9. துர்க்குணபர்த்தா 10. அந்நிய ஜாதியான் 11. ஏககோத்திரன் 12. அடிமையான புருஷன் 13. தீர்க்கரோகம் 14 சீலவிஹீனன் 15. காக்காய் வலி கொண்டவன் 16. பெரியரோகி 17. கூத்தாடி,

இதுவரையிலெடுத்துக்காட்டிய சதுர்யுக சாமானியவசனங்களாகிய சுருதிகளும் ஸ்மிருதிகளும் புநர்

விவாகத்தை அங்கீகரித்திருக்கின்றன என்பதற்குப் போதுமான அத்தாக்ஷியாகும்.

இனி இக்கலியுக தர்மத்தைப்பற்றி யோசிப்போம் "కలౌపారాశరస్మృతాః" "கலௌபராசரஸ்ம்ருதாஹ" என்று கலியுகத்திற்குப் பராசரமகரிஷியின் ஸ்ம்ருதிகளே எல்லா ஸ்ம்ருதிகளைவிட பலத்த அதிகாரமுள்ளதென்று மேலே எடுத்துக்காட்டியிருக்கிறேன்.

இந்த பராசரரும் மநு நாரதரிஷியை அநுஸரித்தே

శ్లో॥ నష్టే మృతే ప్రవ్రజితే క్లీబేచ పతితేపతౌ
పంచస్వాపత్సు నారీణాం పతిరన్యోవిధీయతే॥

நஷ்டே ம்ருதே ப்ரவாஜிதே க்லீபேச பதிதேபதௌ
பஞ்சஸ்வாபத்ஸு நாரீணும் பதிரன்யோ விதீயதே.

என்று பர்த்தா தேசாந்தரம்போய் அவனைப்பற்றிய சமாசாரம் தெரியாமற் போய்விட்டாலும், மரண மடைந்துவிட்டாலும், சந்நியாசியாய் விட்டாலும், அலியாய் விட்டாலும், சுய ஜாதியை விட்டுவிட்டாலும் இந்த ஐந்து ஆபத்துகளில் மட்டும் பாரியை மறுபதியை அடைய வேண்டியதென்று விதித்திருக்கிறூர். இந்த யுகத்திற்கு மற்ற 12 ஆபத்துகள் தள்ளுபடி செய்யப்பட்டன, இவ்வாக்கியம் வாக்குதத்தாபரமல்ல நியோகபரமல்ல இரண்டு பதிசப்தங்களும் சாஸ்திரோக்தமான பதிகளே என்பதைப் பற்றி முன்னுடியே தெளிவாய் உரைக்கப் பட்டது.

இவ்வளவு வெளிப்படையும் பிரபலமுமான விதிகளுக்கு மாருக எதிர்க் கட்சியார் மநுஸ்ம்ருதியிலிருந்து எடுத்துக்காட்டுகிற வாக்கியங்கள் என்னவெனில்:—

158-வது சுலோகம்

అసీతామరణాత్ క్షాంతా నియతా బ్రహ్మచారిణీ॥

அஸீதா மரணாத் க்ஷாம்தா நியதாப்ரம்ஹ சாரிணீ:

என்கிற ஒரு வரியும்

162-வது சுலோகம் பின்னடியாகிய

నద్వితీయశ్చ సాధ్వీనాం క్వచిద్భర్తోపదిశ్యతే॥

நத்விதீயஷ்ச ஸாத்வீனாம் க்வசித்பர்தோ பதிஷ்யதே.

என்கிற தனிவசனங்களை மட்டும் எடுத்துரைத்து ஸ்திரீகளுக்கு எங்கும் இரண்டாவது பர்த்தாவை விதிக்கவில்லையென்றும் புருஷனை இழந்தவள் எக்காலத்தும் பிரம்மசரிய விருதத்தையே அநுஷ்டிக்க வேண்டுமென்றும் எதிர்வாதிகள் சொல்லுகிறார்கள். அவ்வாக்கியங்கள் எந்த சந்தர்ப்பத்தில் சொல்லப்பட்டனவோ, அந்த சந்தர்ப்பத்தைவிசாரிக்கில் நாமிதுவரையிற்சொன்ன புநர்விவாகத்தை நிஷேதிக்கமாட்டாதென்று ஒருபாலன்கூட தெரிந்து கொள்ளலாம். எப்படியெனில்:—

மநுஸ்மிருதி 5-வது அத்தியாயம் 151-சுலோகம் முதல் 164-வது சுலோகங்கள்

శ్లో॥ యస్మై దద్యాత్పితాత్వేనాంభ్రాతావానుమతేపితుః
తంశుశ్రూషేత జీవంతం సంస్థితంచ నలంఘయేత్ 151.

మంగళార్థం స్వస్త్యయనంయజ్ఞశ్చాసాంప్రజాపతేః
ప్రయుజ్యతే వివాహేషుప్రదానం స్వామ్యకారణం 152.

అనృతావృతుకాలేచమంత్రసంస్కారకృత్పతిః
సుఖస్య నిత్యం దాతేహ పరలోకేచ యోషితః 153.

విశీలః కామవృత్తోవా గుణైర్వా పరివర్జితః
ఉపచర్యః స్త్రియా సాధ్వ్యా సతతం దేవవత్పతిః 154

నాస్తిస్త్రీణాం పృథగ్యజ్ఞో నవ్రతంనా ప్యుపోషితం
పతిం శుశ్రూషతేయేన తేనస్వర్గేమహీయతే 155.

పాణిగ్రాహస్య సాధ్వీస్త్రీజీవతో వామృతస్యవా
పతిలోక మభీప్సంతీనా చరేత్కించిదప్రియమ్ 156.

కామంతుక్షపయేద్దేహం పుష్పమూలఫలైశ్శుభైః
నతునామాపిగృహ్ణీయాత్పత్యౌ ప్రేతేపరస్యతు 157.

ఆసీతామరణాత్ క్షాంతానియతా బ్రహ్మచారిణీ
యోధర్మ ఏకపత్నీనాం కాంక్షంతీ తమనుత్తమమ్ 158.

అనేకానిసహస్రాణి కుమారబ్రహ్మచారిణాం
దివంగతాని విప్రాణామ కృత్వాకులసంతతిమ్ 159.

మృతే భర్తరిసాధ్వీస్త్రీబ్రాహ్మ చర్యేవ్యవస్థితా
స్వర్గం గచ్ఛత్య పుత్రాపియథా తేబ్రహ్మచారిణః 160.

అపత్యలోభాద్యాతుస్త్రీ భర్తారమతివర్తతే
సేహనిందామవాప్నోతి పతిలోకాచ్చ హీయతే 161.

నాన్యోత్పన్నా ప్రజాస్త్రీహ నచాప్యన్య పరిగ్రహే
నద్వితీయశ్చ సాధ్వీనాం క్వచి ద్భర్తోపదిశ్యతే 162.

పతింహిత్వా పకృష్టం స్వముత్కృష్టం యానిషేవతే
నింద్యైవ సాభవేల్లోకే పరపూర్వేతి చోచ్యతే 163.

వ్యభిచారాత్తుభర్తుఃస్త్రీ లోకేప్రాప్నోతినింద్యతామ్
సృగాలయోనిం ప్రాప్నోతి పాపరోగైశ్చపీడ్యతే 164.

மநுவானவர் ஸ்திரீகளின் தர்மங்களைப்பற்றி விவரிப் பதில் 151-வது சுலோகத்தால் தகப்பனாவது தன்சம் மதியை சகோதரனுக்காவது மற்றெவருக்காவது

கொடுத்து விவாகம் செய்து வைக்கிறானோ அந்தஸ்திரீ அந்தபதிக்கு ஊழியம் செய்து அவன் இறந்த பின்னும் விபசாரம் செய்யலாகதென்று சொன்னார். 'నలంఘయేత్' (நலங்கயேத்) என்னும் வார்த்தையை ஆதாரமாய்க் கொண்டு, புநர்விவாகம் செய்து கொள்ளலாகாதென்று எதிர்வாதிகள் சொன்னால் மநுவாகிய தாமும் நாரதரும் பராசரருமே விதித்த "நஷ்டேம்ருதே" என்கிற விசேஷ விதிக்கு, முரண்படுமே என்று சிறிதும் நினையாதவராகுவர். இதற்குப்பின் 157-வது சுலோகம் வரையில், இல்லாளின் தர்மங்களைப் போதிப்பதில் ஒரு ஸ்திரீக்கு பர்த்தாவே இகத்திலும் பரத்திலும் சுகத்தை அளிப்பவனென்றும், பர்த்தா நல்நடத்தை யில்லாதவனாயினும், காமநெறியில் இரங்கிய வனாயினும், குண ஈனனாயிருந்தாலும் அவனை விடாமல், பதிவிரதையான ஸ்திரீ ஊழியம் செய்ய வேண்டுமென்றும், ஸ்திரீக்கு பதி ஊழியத்தைத்தவிர வேறு உபவாசங்களும் விருதங்களும் யஜ்ஞமும் கிடையாதென்றும், பதிபோகும்லோகத்தை விரும்பும் ஸ்திரீ பதிஜீவித்திருந்த காலத்தும் இறந்து போய்விட்ட காலத்தும் கொஞ்சமாகிலும் "அப்பிரீயம்" அதாவது விரும்பத்தகாததைச் செய்யக்கூடா தென்று சொன்னார். இவ்விடத்தில் "அப்பிரீயம்" என்னும் வார்த்தை வியபசாரத்தாலும், பர்த்தா இறந்தபின் செய்ய வேண்டிய சிரார்த்தாதி கருமங்கள் செய்யாதிருப்பதாலும் என்று பொருள்படுமேயொழிய எதிர்வாதிகள் வேறெந்த அர்த்தமும் செய்யப் புகுவது பயனற்றப் பிரயாசையாய் முடியும். வியாக்யான கர்த்தாவாகிய கல்லூக பட்டரும்

నాతిక్రమేత్ వ్యభిచారేణ తదీయ శ్రాద్ధ
తర్పణాకరణేన పారలౌకిక కృత్యఖండనేనచ॥

*நாதிக்ரமேத் வ்யபிசாரேண ததீய ச்ராத்த*
*தர்ப்பணு சரணேன பாரலௌகிக க்ருத்ய கண்டனேனச*

என்றுமேற்சொன்ன பொருளையேசொன்னுர். அதற்குப் பின் மநுவானவர் விதவைகளின் தர்மத்தைச் சொல் லும்போது 16lவது சுலோகம் வரைக்கும் பிரமசரிய விரதம் அநுஷ்டிக்கிறவர்கள் புஷ்பமூலபலங்களால் தேகத்தை ஒடுக்கவேண்டுமென்றும், பரபுருஷனுடைய பெயரையும் நினைககலாகாதென்றும், மரணபரியந்தம் பிரமசாரி நேமத்தை உடையவளாயிருக்கவேண்டுமென் றும், சந்தானமற்றவளாயிருந்தாலும், குமாரப்பிரம்மசாரி கள், சுவர்க்கலோகத்தை அடைந்த பிரகாரமே பர்த்தா இறந்ததுமுதல் பிரமசரியவிரதத்தை அநுஷ்டிக்கும் பதி விரதை, சந்தானமற்றவளாயினும் ஸ்வர்க்கத்தை அடை வாளென்றும் ஸந்தான அபேக்ஷையால் பர்த்தாவை அதிக்ரமித்து வியபசரிக்கும் ஸ்திரீ இந்த லோகத்தா ரின் நிந்தனை அடைவதோடுகூட பரலோகத்தையும் அடையமாட்டாளென்று சொன்னுர் "அதிவர்த்ததே" "அதிவர்த்தே"என்னும் பதத்துக்கு வியபிசரித்தலென்றே கல்லூகபட்டர் உரை யெழுதினுர். விதவை ஸ்திரீக்கு பிரமசரிய விரதம் இன்னதென்று சொன்னமாத் திரத்தால், பதியை இழந்த ஸ்திரீகள் வேறுவித மாயிருக்கக் கூடாதென்று எதிர் வாதிகள் சித்தாந் தம் ஏற்படுத்தினுல், மேலே விஸ்தாரமாய்ச்சொன் னபுநர் விவாக விசேஷ விதிகளும் உடன்கட்டை ஏறவேண்டிய விதிகளும் ஈசுவரன் அநுக்கிரகித்த வேதசுருதிகளும் அவர் கட்டளையும் வேறும்வார்த் தைகளாய்விடாதா?

அதற்குப்பின் பர்த்தாவுக்கெதிரிடையான பரபுரு ஷனுல் பெற்ற பிள்ளை அந்த ஸதிரீக்காகட்டும் அந்த

பரபுருஷனுக்காகட்டும் புத்திரனைகமாட்டானென்றும் த்விதீயனென்றதால் கள்ளப்புருஷனை பர்த்தா என்று சொல்லத்தகாதென்றும் 162-வது சுலோகத்தால் சொன்னார். கடைசி இரண்டு வாக்கியத்தால் பர்த்தா தாழ்ந்தவனென்று சொல்லி உயிரோடே இருக்கும் தன் கணவனை விட்டுவிட்டு உயர்ந்தவனுயிருப்பானை அடைப வள் இவ்வுலக நிந்தனையடைந்து, பரபூர்வை என்று சொல்லப்படுவாளென்றும், வியபசாரம் செய்யப்பட்ட வள் நிந்தனையடைவதோடு நரியின் ஜன்மத்தை எடுத்து பாபரோகங்களால் பீடிக்கப்படுவாளென்றும் சொல்லப் பட்டிருக்கிறது. விதவா தர்மம் இன்னதென்றும் வியபசாரத்தைத் தூஷிக்கும் மேற்சொன்ன சுலோ கங்களிலெதுவும் ஐந்து ஆபத்துகளில் புநர் விவா கத்துக்கு அநுமதி கொடுத்த ஷி மநுவே ஷி புநர் விவாகத்துக்கு விரோதமாய் ஒருக்காலும் கருதியிரா ரென்று அந்தக் காண்டத்தைப் பொருத்து ஒரு சிறு பாலனும் சொல்லத்தக்கது.

மேற்சொன்ன எல்லா வாக்கியங்களால் பதி ஜீவந்த னுயிருக்கும் காலத்தில் பதிவிரதை இருக்கவேண்டிய லட்சணத்தையும், பதியிறந்தபின் அப்பதி போகும் லோகத்தைக் கோரும் ஸ்திரீ அநுஷடிக்கவேண்டிய பிரமசாரியவிரதத்தின் இலட்சணத்தையும், எக்காரணத் தாலும் எக்காலத்தும் வியபசாரம் செய்யலாகாதென்றும் தெளிவாய்ச சொன்னுரேதவிர பதியிறந்தபின் பிரம்ம சரியவிருதத்தைத்தான் அநுஷ்டிக்கவேண்டுமென்று மநு நிர்பந்தம் செய்யவில்லையென்று தெரிந்து கொள்ளத்தக்கது. ஏனெனில் பதியிறந்தபின் பிரம சரிய விருதத்தை அநுஷ்டியாத ஸ்திரீ விபசாரவழியில் இறங்கி விடுவது மானிட இயற்கையாகுமாதலாலும்

கடுமையான பிரம்மசரிய விரதத்தை அநுஷ்டித்தல் உலகத்தில் பெரும்பாலோரால் முடியாதென்பதும் நன்றுயறிந்த மநுவானவர் "நஷ்டேம்ருதே" சுலோகத்தால் வேறொரு பதியை அடைவாய் என்று விதித்தாரென்றும் தெளிவாகின்றது. தவிர "ఉదీర్ష్వనారి" என்னும் சுருதியில் புநர் விவாகம் செய்துகொள்ளும்படி கட்டளை இட்டிருப்பதோடு அவ்வண்ணம் புநர் விவாகம் செய்துகொண்ட பதிவிரதைகள் தங்கள் இரண்டாம் கணவரோடு உத்தம லோகத்தையும் அடைவார்களென்றும் அருளி இருப்பதை நான் உங்களுக்கு முன்னடியே தெரிவித்திருக்கிறேன்.

முதல் விவாகம் செய்து கொள்வதும் புநர் விவாகம் செய்து கொள்வதும் தெய்வச்செயலாய் ஏற்படக்கூடிய விதவா இலட்சணத்தை காப்பாற்றுவதற்காக ஏற்படுத்தப்பட்ட பிரம்மசரிய விருதத்தை அநுஷ்டிப்பதும் மதுமாமிசங்களை சாப்பிடுவதும் பரிசங்கை விதியாகையால், இன்னதுதான் செய்யவேண்டுமென்று ஒருவரும் நிர்ப்பந்தம் செய்யவில்லை. செய்வதும் கூடாது. ஸ்திரீ புருஷர்கள் விவாகம்செய்துகொள்வது அவரவர் இஷ்டத்தைப் பொறுத்ததே யொழிய நிர்ப்பந்திக்கத்தக்கதல்ல. ஆனால் விபசாரம் செய்தல் கண்டிக்கத்தக்கது.

பாகவதம் ஏகாதச ஸ்கந்தத்தில்

లోకే వ్యవాయామిష మద్యసేవా నిత్యాస్తు జంతోర్నహి
తత్రచోదనా।

వ్యవస్థితి స్తేషు వివాహయజ్ఞ సురాగ్రహైరాసు నివృత్తిరిష్టా॥

லோகே வ்யவாயாமிஷ மத்யஸேவா நித்யாஸ்து
[ஜந்தோர்ன ஹிதத்ரசோதனா

வ்யவஸ்திதி ஸ்தேஷு விவாஹ யஜ்ஞ ஸுராக்ரஹை
[ராஸு நிவ்ருத்திரிஷ்டா

இதன் பொருள்:—காமசாந்தி செய்துகொள்வதும் மது மாம்சங்களை சாப்பிடுதலும் இவ்வுலகத்தில் மாநிட இயற்கைக்குணமாகும். ஆனால் விவாகம்செய்து காமசாந்தியை அடையவேண்டும். யாகம்செய்து மாமிசம் சாப்பிடவேண்டும் "சுராக்கிரகம்" என்கிற கிரியையை நடத்தி மது அருந்தவேண்டுமென்கிற நிபந்தனைகளையுடையன. இவைகளைத் தவிர்ப்பதே கருத்தாகுமென்று வேதாந்திகளுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்களை அநுசரித்தே கைவல்ய நவநீத ஆசிரியரும் "கள்ளும் ஊனும் நீ விரும்பினால் மகங்கள்செய், காமத்தில் மனதானால் கொள்ளும் பெண்டொடு கலவி செய்யென்றும்" விள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும் தவிர்வதே கருத்தாகும் என்றும் உரைத்தார். காம இச்சை தோன்றினால் சாஸ்த்ரோக்தமான விவாகம்செய்து அச்சுகத்தையடைவாய் என்று சொன்னதால் முறைகேடான வியபிசாரந்தான் தடுக்கப்பட்டது.

இவ்விடத்தில் எவரும் ஒரு முக்யமான விஷயத்தைக்கவனிக்கத்தக்கது. யாதெனில் காமஇச்சைதோன்றி விவாகம் செய்துகொள்ள இஷ்டப்பட்டவர்களுக்கு மாத்திரம் முதல் விவாகமோ, புநர் விவாகமோ செய்து வைப்பது தகுதியென்று ஏற்படுவதால் முதல் விவாகத்துக்கு யுக்த வயது பெண்பிள்ளைகளுக்கு 18-ஆகும் ஆண்பிள்ளைகளுக்கு 25 ஆகுமென்று இக்காலத்து அரும்பெரியாராகிய சுவாமி சிரத்தானந்தர் 11-10-25 யன்று ஜலாந்தர் ஜில்லாவில் நடத்திய உபந்நியாசத்தில் விளக்கி அத்தீர்மானத்துக்கு மகா ஜனங்களின் ஆமோதிப்பைப் பெற்றார்.

இனி விவாகம் செய்துகொள்ளவேண்டிய சிறுவன் சிறுமிகள் எவ்வித லட்சணத்தோடு கூடியவர்களாயிருக்

கவேண்டுமென்று யாஜ்ஞவல்கயர் விவரித்திருக்கிறதைப் பற்றி சிறிது ஆலோசிப்போம்.

అవిప్లుతబ్రహ్మచర్యో లక్షణ్యాం స్త్రియముద్వహేత్।
అనన్యపూర్వికాం కాంతా మసపిండాం యవీయసీమ్॥

அவிப்லு தப்பிரம்ஹ சர்யோ லக்ஷண்யாம் ஸ்த்ரி யமுத்வஹேத்
அநந்ய பூர்விகாம் காந்தா மஸபிண்டாம் யவீயஸிம்

போதாயனர்

శ్రుతి శీలినే విజ్ఞాయబ్రహ్మ చారిణేర్థినే దేయా॥

ச்ருதி சீலினே விஜ்ஞாய ப்ரம்ஹ சாரிணேர் திநே தேயா.

இத்யாதி வாக்கியங்களின்படி ஒருக்காலும் ஸ்திரீ சம்போகம்செய்யாத ஒருபிரம்மசாரி தன்விருதம்நிறைவேறியதின்பின் அதாவது வேத சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தபின் தகுதியான ஒரு பாலிய கன்னிகையை மணம்புரியக்கடவன். அவள் முன்னொருவனுக்கு விவாகம் செய்யப்படாதவளாய், சௌந்தர்யவதியாய் ஒரே சபிண்டவர்க்கத்தைச் சேராதவளாய், வயதில் சிறியவளாய், ரோகமற்றவளாய் ஏககோத்திரத்தில் அமையாதவளாயிருக்க வேண்டும். மணவாளனுக்கும் இந்த இலட்சணங்களே அவசியம். அவன் ஏகஜாதியானாய் சுருதியில் நிபுணனாய், வாலிபனாய் யாவராலும் வாஞ்சிக்கப்பட்டவனாய் ஒருக்காலும் சம்யோகம்பண்ணியிராதவனாயிருக்கவேண்டுமென்று சொல்லப்பட்டது. இதை ஆதாரமாகக்கொண்டுகன்னிகைக்குத்தானே விவாகம், முன்னொருவனுக்கு விவாகமான விதவைக்கு விவாகம் கூடாதே என்று எதிர்வாதிகள் சிறிதும் யோசியாது சொல்லுகிறார்கள். ஆலோசித்துப்பார்க்கில்

சம்யோகம் செய்யாதிருந்த பிரமசாரிக்கல்லவா, கன்னியை தானம்செய்யவேண்டும்? முதல் பாரியை இழந்தவன் பத்நியோடே ஒரு நாள் மட்டும் சுகமடைந்தவனுயிருந்தாலும் அவனுக்கும் விவாகம் கூடாதே? ஏனெனில் "அவிப்லுத" பிரம்மசாரீக்கல்லவோ கன்னிகை விதிக்கப்பட்டிருக்கிறது. தன் கன்னிகைக்கு சாஸ்திர முறைப்படி வரன்வேண்டுமென்று பிடிவாதம் செய்பவர் சம்யோகம் செய்த இரண்டாம் விவாகிகை விரும்புவார்களா. ஆகிலும் புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும், சாஸ்திரங்கள் புநர் விவாகத்தை அங்கீகரித்திருப்பதால் தான் மேற்சொன்ன சுவாமி சிரத்தாநந்தர் கன்னிகைக்கு அவிப்லுத பிரமசாரியையும் பத்னியை இழந்த விதவ புருஷனுக்கு "நஷ்டேம்ருதே" விசேஷ விதியிற் சொன்ன புருஷனை இழந்த விதவா ஸ்திரீயையும் மணம் செய்விக்கத்தக்க தென்றும் எடுத்துக்காட்டி மேற்சொன்ன மகா ஜனக்கூட்டத்தில் ஜனங்களின் ஆமோதிப்பைப் பெற்றாரென்று (நான் நினைக்கிறேன்). – வேறு அநேக காரணங்களையும் அவர் சொல்லியிருப்பாரென்பதற்கும் சந்தேகமில்லை.

இன்னமும் எதிர்வாதிகளின் சில ஆக்ஷேபனைகளைப் பற்றி ஆலோசிப்போம்.

శ్లో॥ పాణిగ్రహణికామంత్రాః కన్యాస్వేవప్రతిష్ఠితాః।
నాకన్యాసు క్వచిన్నౄణాం లుప్తధర్మక్రియాహితాః॥

பாணிக்ரஹணிகாமந்த்ரா: கன்யாஸேவ ப்ரதிஷ்டிதா:
நாகன்யாஸு க்வசிந்ருணும் லுப்தர்ம க்ரியாஹிதா:

இந்த மநுவசனத்தின்படி விவாக மந்திரங்கள் கன்னிகைகளுக்கு மட்டுமே பிரதிஷ்டிக்கப்பட்டிருக்கிற

தென்றும் விதவைகள் தர்மக் கிரியைகளுக்கு அபாத்திராகையால் இந்த மந்திரங்கள் விதவைகளுக்கு பயன் படாதென்றும் ஆகையால் இந்த மநு வசனத்தின்படி கன்னிகைகளுக்குத் தவிர விதவைகளுக்கு விவாகம் கூடாதென்றும் சொல்லுகிறார்களாம். இப்படி சொல்லுபவர் 'ఉదీర్ష్వనారీ'' என்னும் சுருதியில் சொன்ன கட்டளையையும் ''நஷ்டேம்ருதே'' என்கிற மநு நாரதர் பராசருடையஸ்மிருதிவாக்கியங்களையும் மறந்தவர்களாவார். ஷ்டி சுலோகத்திற்கு குல்லூகபட்டு வியாக்கியானத்தில் சாஸ்த்ரோக்தமான புநர்விவாக மார்க்கத்தைவிட்டு விபசார தோஷத்தினுல் க்ஷதயோனியானவர்களுக்கே அகந்ய என்று எழுதப்பட்டிருக்கிறது.

தவிர விதவைகளுக்கும் விவாகம் செய்யப்பட வேண்டியவர்களுக்கும் ஸ்மிருதிகளில் ''கன்னிய'' பதத்தை உபயோகப்படுத்துவதுண்டு,

శ్లో॥ విధవాయాం భవేత్కన్యా నిర్దోషా భర్తృవర్జితా।
తస్యావాసః పితుర్వేశ్మ సలజ్జా చైవ సర్వదా॥ పరాశరులు.
కన్యాయాం దత్తశుల్కాయాం మ్రియతే యదిశుల్కదః।
దేవరాయ ప్రదాతవ్యా యదికన్యానుమన్యతే॥-మను.

*விதவாயா பவேத்கன்யா நிர்த்தோஷா பர்த்ரு வர்ஜிதா-*
*தஸ்யாவாஸ: பிதுர்வேஷ்ம ஸலஜ்ஜா சைவஸர்வதா-*
*பராசரர்.*
*கன்யாயாம் தத்தசுல்காயாம் ம்ரியதே யதிசுல்கத:-*
*தேவராய ப்ரதா தவ்யா யதிகன்யாநு மந்யதே - மநு*

என்று பராசரர் மநு வசனங்களின்படி "கன்னியா" பதம் புநர் விவாகம் செய்யவேண்டியவர்களுக்கும் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதாலும் விதவை விவாகம்

மநு ஸ்மிருதியிலேயே விதிக்கப்பட்டிருப்பதாலும் கெட்டுப்போய்த் திரிகிறவர்களுக்கு மாத்திரம் விவாக மில்லையென்று மநு வாக்கியத்துக்கு கல்லூகபட்டால் பொருள் செய்யப்பட்டது. மேற்சொன்ன பராசரர் வசனத்தின்படி விதவையாகிவிட்ட கன்னியும், தோஷ மற்றவளாய் பர்த்தாவினுல் விட்டுவிடப்பட்டவளும் எப் போதும் பிதாவின் வீட்டில் வாசஞ்செய்ய வேண்டு மென்று சொல்லியிருப்பதால் தோஷமற்றவளான விதவையாய்விட்ட கன்னியை என்று விதவைக்கும் "கன்னிய" பதம் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதால் அவளுக்கும் அந்த மந்திரங்களாலேயே விவாகம் செய் யத் தகுந்தவளென்று தெரிந்துகொள்ளக்கூடியது.

மற்றுமோர் ஆட்சேபனைக்கு சமாதானம்.

శ్లో॥ సకృదంశో నిపతతి సకృత్కన్యా ప్రదీయతే।
సకృదా హదవానీతి త్రీణ్యేతాని సతాంసకృత్॥

ஸக்ருதம்ஷோ நிபததி ஸக்ருத்கன்யா ப்ரதீயதே-
ஸக்ருதா ஹதவாநீதி த்ரீண்யேதாநி ஸதாம் ஸக்ருத்.

இந்த மநு வசனப்படி சொத்து பாகம் பண்ணுதல், கன் னியைக்கொடுத்தல், ஒருபொருளைத் தானம்செய்தல், இம் மூன்று காரியங்களும் ஒரே தடவைதான் என்று மநு சொல்வதால், மறு விவாகத்துக்கு அதே கன்னியை தத் தம்செய்தல் கூடாதென்றும் ஆகையால் ஸ்திரீயின் மறு விவாகம் நிஷேதிக்கப்பட்டதென்றும் வாதிக்கிறார்கள். இது பொது விதி. ஒருவனுக்கு கொடுத்துவிட்ட கன் னியை மற்றொருவனுக்கு இஷ்டம் நேர்ந்தபடி கொடுக் கக்கூடாதென்பது யதார்த்தமேயாகிலும், விசேஷ விதி யாகிய "நஷ்ட" த்வாதி ஐந்து ஆபத்துகளில் மறுதானம

செய்யலாமென்று வெளிப்படை. சொத்தை தானம் பண்ணுதலும், பெண்ணை தத்தம் செய்து கொடுத்தலும் ஒரு தர்மத்தை நிறைவேற்றும் பொருட்டு செய்யும் உடன்படிக்கையாகும். நீர் இன்ன காரியம் செய்யும்பொருட்டு இந்த சொத்தை தானம் செய்கிறேனென்று சொல்லிவிட்டாலும், தத்தம் வாங்கிக்கொண்டவன் குறிப்பிட்ட தர்மத்தைச் செய்யாவிட்டால், தானம் கொடுத்தவன் அந்த சொத்தை மறுதானம் செய்யவோ அல்லது அக்காரியத்தை தன் நேர் விசாரணையினல் செய்யும் பாத்தியதையை இழந்துபோகமாட்டானல்லவா? ஒரு கன்னியை ஒரு புருஷனுக்கு கிரகஸ்தா ச்ரமதர்மம் நடத்த தத்தம் செய்யப்பட்டாள். அந்த இல்லற வாழ்க்கையை நடத்த "நஷ்டேம்ருதே" விதியிற் சொன்னபடி தவறிப்போனல் முன்னடியே ஸ்மிருதியில் சொன்னவண்ணம் பிதா வீட்டில் வசிக்கும் விதவைக் கன்னியையும் பிதாவோ மற்ற பாத்தியஸ்தரோ, புனர் தானம் செய்விக்கலா மென்று தெளிவாகிறது.

## இனி புராணங்களைப்பற்றி சிறிது ஆராய்வோம்.

பிரசித்திபெற்ற புராணமாகிய மகாபாரதப் பீஷ்ம பருவத்தில்:—சுபர்னன் என்பவனல் பர்த்தா கொல்லப்பட்டதின்பின், நாகதேசத்தரசன் புத்திரியாகிய உலூபி என்னும் விதவைப் பெண்ணை அர்ஜுனன் மறுவிவாகம் செய்துகொண்டான். அப்பெண்ணுக்குப் பிறந்த ஐராவதனென்னும் புத்திரன் ஔரசன் என்றே கருதப்பட்டான். அவ்விதவைப் பெண்ணை தகப்பனே மறுதானம் செய்தான். இவ்விதமாய் உத்தம அரசவம்சத்திலும் ஸ்திரீகளின் புனர் விவாகம் நடந்திருக்கிறதென்பது பிரசித்தம். (ஔரஸன் என்னும்பதம் சாஸ்த்

ரோக்தமாய் விவாகம் செய்யப்பட்ட ஸ்திரீயின் புத்திரனென்று பொருள்)

ஆரண்ய பர்வத்தில்:—காட்டில் நளமகாராஜன் தமயந்தியை விட்டுப்பிரிந்துபோன சிலகாலத்திற்குபின், தன் பர்த்தா ஜீவித்திருக்கிருரோ இல்லேயோ என்பதை தெரிந்துகொள்ள அந்தரங்கத்தில் எண்ணங்கொண்டு, அதை எவருக்கும் வெளிப்படுத்தாது மறுவிவாகம் செய்துகொள்ள இச்சையிருப்பதாக மகா பதிவிரதை யாகிய தமயந்தி பகிரங்கமாய் இராஜசபைக்குச் சொல்லி யனுப்ப இதை சுதேவன்மூலமாய் தெரிந்துகொண்ட ருதுபர்ணனென்கிற இராஜ ரிஷியும், மற்ற தேசத்து அரசர்களும் சுயம்வரத்துக்கு வந்திருப்பார்களென்று கருதி, தமயந்திபை மணம்புரியக் கோரியவராய் தாமும் வந்திருந்தாரென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விரண்டாம் விவாகம் நடைபெருவிட்டாலும் பூர்வகாலத்தில் ஸ்திரீகளுக்கு மறுவிவாகம் செய்துவைப்பது வழக்கம் அல்லது ஆசாரமாயிருந்த தென்பதைத் தெளிவாய்க்காட்டுகின்றது.

மேற்சொன்னபடி சுருதிகளும் ஸ்ம்ருதிகளும் புராணங்களும் புனர் விவாகத்தை அங்கீகரித்திருக்கையில், எதிர்வாதிகள் ஆதித்திய புராணத்திலிருந்து ஒரு வாக்கியம் சொல்வதுண்டு. அதாவது

ఊఢాయాః పునరుద్వాహం జ్యేష్ఠాంశం గోవధం తథా।
కలౌ పంచనకుర్వీత భ్రాతృజాయాం కమండలుమ్॥

ஊடாயா: புநருத்வாஹம் ஜ்யேஷ்டாம்சம் கோவதம் ததா-கலௌ பஞ்ச நகுர்வீத ப்ராத்ரு ஜாயாம் கமண்டலும்.

முறைப்படி ஒருதடவை விவாகமாய் விட்டவளின் புநர் விவாகமும், மூத்த சகோதரனுக்குச் செல்லும் ஜேஷ்டாம்சமும், பசுவதையும், சகோதரனுடைய மனைவியிடத்தில் புத்திரனைப் பெறலும், சந்நியாசம் அடைவதும், கலியுகத்திற்கு விலக்கு என்று மேல்வாக்கியத்தின் பொருள்—இவ்வாக்கியம் மநு—நாரதர் — கலியுகத்துக்கு மேலான தர்மசாஸ்திர அதிகாரியாகிய பராசரர் இவர்களுடைய "நஷ்டேம்ருதே" விதிக்கு முரண்படுகிறது. தவிர இந்த வாக்கியம் மேற்சொன்ன புராணத்திலுள்ள வாக்கியந்தான் என்று ஒப்புக்கொண்டாலும், முதல் முதலிலேயே விளக்கியபடி சுருதி ஸ்மிருதிகளை விரோதிப்பதால் இப்புராணவாக்கியம் த்யஜிக்கத்தக்கதேயாகும். தவிர இதில் விலக்கப்பட்டிருக்கும் கோவதையாகங்களும், சந்நியாசமும் நாளதுவரையில் நடந்தேறி வருவதால், மற்ற மூன்று விலக்குகளுக்குமட்டும் வலுவெங்கே இருக்கிறது? தவிர இந்த ஆதிபுராணம் பாகவதத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ள புராணங்களில் ஒன்றல்லவென்றும், இவ்வாக்கியம் எவராலோ எழுதிப் பழைய ஏட்டுச்சுவடிகளில் சேர்க்கப்பட்டுள்ள ஆதாரமற்ற தனிவாக்கியமென்று பெரியார்கள் சொல்லியுள்ளார்.

எதிர்வாதிகள் கேட்கும் சிலசொற்ப கேள்விகளுக்கும் பதில் அளித்துவிட்டு இம்மட்டோடே நிறுத்திக் கொள்வோம்.

1. ஒரு தகப்பனுக்கு பிரதமவிவாகத்தில் செய்துகொண்டகன்னிகையின் புத்திரர்களுக்கும் இரண்டாம் விவாகத்தில் செய்துகேண்ட விதவை ஸ்திரீயின் புத்திரர்களுக்கும் தாய பாகம் எப்படி யென்று

கேட்கிறார்கள். இந்த இரண்டுபத்நிகளும் சாஸ்த்ரோக்தமாய் விவாகம் செய்துகொண்டவர்களாகையால், எல்லா புத்திரர்களுக்கும் சமதாய பாகந்தானென்று நம்துரைத்தனத்தாரும் 1856 ஷூ௵ 15 ௳. சட்டத்தில் விதித்திருக்கிறார்கள்.

2, 3. விதவைகளை, புநர் விவாகத்துக்கு தத்தம் செய்பவர் எவர்? மந்திரங்களேவை? என்னும் கேள்விகளுக்குத் தகப்பனும் அநுமதிப் பெற்றவர்களும் பந்துக்களும் தானம் செய்யலாமென்றும், வியபசார தோஷமற்ற விதவைஸ்திரீகளும் "கன்னியா" பதத்தால் வழங்கப்பட்டிருப்பதால் இருவருக்கும் ஒரே மந்திரமே உபயோகிக்கலாமென்றும் மேலே விவரித்திருக்கிறேன். நம் துரைத்தனத்தாரும் அவ்வண்ணமே ஷை சட்டத்தில் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

4. பூர்வ பர்த்தாவின் சிரார்த்தத்தை யார் செய்வதென்னும் கேள்விக்கு உத்தரம்:—

சந்தானமிருக்கும் பட்சத்தில் கேள்விக்கு இடமே இல்லை. சந்தானமில்லாவிட்டால்

అపుత్రా శయనం భర్తుః పాలయంతీ వ్రతే స్థితా।
ప్రత్యేవ దద్యాత్తత్పిండం కృత్స్నమంశం లభేతచ॥

அபுத்ரா சயனம் பர்த்து: பாலயந்தி வ்ரதே ஸ்த்திதா-
ப்ரத்யேவ தத்யாத்தத்பிண்டம் க்ருத்ஸ்ன
மம்சம் லபேதச.

என்கிற விஜ்ஞாநேசுவர மநு வசனப்படி, சந்தானமற்றவள் தன் இறந்துபோன பர்த்தாவின் படுக்கைக்குப் பங்கம் வராமல் பிரமசரிய விருதத்தை வழுவாது அநுஷ்டித்துப் பர்த்தாவுக்கு பிண்டப்பிரதானம்செய்து அவன்

சொத்தை அடையவேண்டுமென்று விதித்திருப்பதால், அந்த ஸ்திரீ, பிரம்மசரிய விருதத்தைவிட்டு, மற்றொருவனை கிரமமானபடி விவாகம் செய்துகொண்டால் சிரார்த்தம் செய்யவேண்டியதில்லை யென்று தெளிவாகிறது. அவளே இறந்துபோனால் சிரார்த்தம் நடக்கமாட்டாதல்லவா? அதுபோலவே, அவள் புநர் விவாகம்செய்துகொண்டால், வேறொரு கோத்திரத்தையும் அடைவாளாகையாலும், முதல் பர்த்தாவின் குடும்பத்தை பூராவாய் விட்டு புது சம்ஸ்காரமாகிய விவாகத்தைச் செய்துகொள்வதால், பூர்வ பர்த்தாவின்சொத்து பாத்தியதை விட்டுப்போகும். தத்துப்போய்விட்ட புத்திரனுக்கேசிரார்த்தம் செய்யவேண்டியகடமையும் சொத்து பாத்தியதையும் போய் விடுகிறதென்றால். புநர் விவாகம் செய்துகொண்ட விதவைப் பெண்ணுக்கும் சிரார்த்தம் செய்யவேண்டிய கடமையும் சொத்து பாத்தியதையும் இல்லாமற் போய்விடுகிறது. சொத்தை அடைவதற்கு சிரார்த்தம் செய்வதே யொழிய அநேகம்பேர் பிரமிக்கிறபடி இறந்துபோனவன் ஆத்மாவின் உஜ்ஜீவனார்த்தமல்லவென்று தெளிவாயிருக்கிறது.

5. கோத்திரத்தைப்பற்றி பலபேர் கேட்கிறதுண்டு. சுருங்கச் சொல்லில், கன்னியாதானமும், புநர்தானமும் தகப்பன் எந்த கோத்திரனோ அந்த கோத்திரப் பெயரால்தான் அவசியமாய்ச் செய்யவேண்டியது. கோத்திர சப்தத்தை விசாரிக்கில் இந்த சந்தேகத்துக்கு நியாயமில்லை. ஜமதக்கினி, பாரத்வாஜர், விசுவாமித்திரர், அத்திரி, கௌதமர், வசிஷ்டர், காசியபர், அகஸ்தியர், இவர்கள் கோத்திர கர்த்தாக்கள். இவர்களில் எந்த ரிஷி கோத்திரத்தில் பிறந்தவர்களோ அந்த கோத்திரத்தை யடைவார்களாகையால், பிதாவின் கோத்திரந்

தையே புக்திரியும் அடைவாளென்பதற்கு யாது சந்தேகம்?

శ్లో॥ స్వగోత్రా ద్భ్రశ్యతే నారీ వివాహా త్సప్తమే పదే।
పతిగోత్రేణ కర్తవ్యా తస్యాః పిండోదకక్రియా॥

ஸ்வகோத்ரா த்ப்ரஷ்யதே நாரீ விவாஹா த்ஸப்தமேபதே-
பதிகோத் ரேண கர்த்த வ்யா தஸ்யா: பிண்டோத சக்ரியா.

ஒருவனுடைய புத்திரி, சப்தபதி சடங்கின் அனந்தரம் தன் கோத்திரத்தை விட்டுவிட்டு, பதியின் கோத்திரத்தை அடைகிறபடியால், அவள் கணவனுக்கு சிரார்த்த பிண்டோதக்கிரியைகளை செய்யும்போது, பதியின் கோத்திரத்தால் செய்யவேண்டும். ஆகிலும், தான் பிறந்த கோத்திரம் அவள் சாகுமட்டும் இயற்கையிலேயே அவளிடத்தில் அமைக்கப்பட்டிருப்பதால், விவாகிதஸ்திரீ, தன் தகப்பனுக்கு கயாசிரார்த்தாதிகள் செய்வதற்கு அர்ஹை ஆகிருள். மறுவிவாகம் செய்து கோண்டவள் அவ்விரண்டாம் பதியின் கோத்திரத்தை அடைவாள்.

శ్లో॥ ఆముష్య పౌత్రీం చాముశ్య పుత్రీం చాముష్య గోత్రజాం।
ఇమాం కన్యాం వరాయాస్మై వయం తద్వి వృణీమహే।
శ్రుణుధ్వ మితి వై బ్రూయా దసౌ కన్యా ప్రదాయకః॥

ஆமுஷ்ய பௌத்ரீம் சாமுஷ்யபுத்ரீம் சாமுஷ்ய கோத்ரஜாம்
இமாம் கன்யாம், வராயா ஸ்த்மே, வயம் தத்வி வ்ருணீமஹே
ஸ்ருணு த்வ மிதிவை ப்ரூயா தஸௌ கன்யா ப்ரதாயக:

என்று சொல்லப்பட்டபடி தத்தம் செய்யப்படுகிறவள், இன்னருடைய பௌத்திரி, இன்னர் புத்திரி, இன்னர் கோத்திரத்தில் பிறந்தவளாயிருக்கும், இந்தப் பேர்

கொண்டகன்னிகையை, இந்த இந்த விபரங்கள் கொண்ட வரனுக்குக் கொடுக்கிறேன் என்று சர்வத்திராள் முன் வாக்கிடவேண்டியிருக்கிறதாகையால், விவாகஞ் செய்த தினல் மட்டும், ஒரு ஸ்திரீ, பாட்டனுக்கு பேத்தியும், தகப்பனுக்கு புத்திரியுமாகும் கோத்திரத்திற் பிறந்த இயற்கைக் கோத்திரம், போய்விடமாட்டாதாகையால், விதவை ஸ்திரீயின் புநர் விவாகமும் தகப்பன் கோத்திரப் பெயரால்தான் புநர்தானம் செய்ய வேண்டியது

6. முண்டனம் (அதாவது விதவைகளை மொட்டையடித்தல்) பதியை இழந்தவளுக்கு பத்தாம்நாள் மொட்டை யடித்துவிடவேண்டுமே? புநர் விவாகம் செய்யும் ஸ்திரீக்கு மொட்டையடிக்கக் கூடாதென்று எங்கேயாவது விதித்திருக்கிறதா? வென்று பலர் கேட்கிறார்கள். ஸ்திரீக்கு பத்தாந்தினம் மொட்டையடித்தல் லௌகிகமே தவிர ஸ்மிருதி சம்மதியுள்ளதல்ல. மொட்டை யடிப்பதற்கு விதிக்கும் மந்திரங்கள் எங்கும் காணவில்லை. ஸ்திரீகளுக்கு மொட்டையடித்தல் தகாதென்று அநேக ஸ்மிருதிகள் கோஷிக்கின்றன:—

శ్లో॥ సర్వాన్ కేశాన్ సముద్ధృత్య ఛేదయే దంగుళద్వయం।
ఏవం నారీ కుమారీణాం శిరసో ముండనం స్మృతం।
నస్త్రియాః కేశవపనం నదూరే శయనాసనం।
నచగోష్ఠే వసేద్రాత్రౌ నదివాగా అనువ్రజ జేత్।
నదీషుసంగమే చైవ అరణ్యేషు విశేషతః।
నస్త్రీణామజినం వాసో వ్రతమేవ సమాచరేత్॥

ஸர்வான் கேசாங் ஸமுத்யத்ய சேதயே தங்கள த்வயம்
ஏவம் நாரீ குமாரீணாம் சிரஸோ முண்டனம் ஸ்ம்ருதம்

நஸ்த்ரியா: கேசவபநம் நதூரே சயநாஸநம்
நசகோஷ்டே வஸேத்ராத்ரௌ நதிவாகா அநுவ்ராஜ ஜேத்
நதீஷுஸங்கமே சைவ அரண்யேஷு விசேஷத:
நஸ்த்ரீணுமஜினம் வாஸோ வ்ரத மேவ ஸமா சரேத்:

என்று 9-வது அத்தியாயத்தில் கலியுக தர்மாதிகாரியாகிய பராசரமகரிஷி ஸ்திரீகளுக்காகட்டும் பாலிய விதவைகளுக்காகட்டும், எவ்விடத்திலாவது மொட்டையடித்தலை விதித்திருக்கும் பட்சத்தில், தலைமயிரையெல்லாம் விட்டுவிட்டு நுனியில் இரண்டு அங்குல மாத்திரந்தான் அறுத்துவிடவேண்டுமென்றும், பிரமசரிய முதலான விருதங்களில் ஸ்திரீகளுக்கு எப்போதும் மொட்டையடித்தல் கிடையாதென்றும் தெளிவாய்ச்சொன்னார்.

தென்கலை வைஷ்ணவப் பிராமணர்கள் விதவை ஸ்திரீகளுக்கு முண்டனம் செய்வதில்லை என்பது எவருக்கும் தெரிந்ததே.

## 7. கடைசியாய் புநர்பு பதத்தின் மெய்யான கருத்தை ஆராய்வோம்

சிலர் இதுவரையில் சொன்னவைகளை எல்லாம் அங்கீகரித்து, ஸ்திரீகளின் புநர் விவாகம் சாஸ்திர சம்மதியுள்ளதுதானென்றும் ஒப்புக்கொண்டு, மறுவிவாகம் செய்துகொண்டவர்களின் சந்ததியார், தாழ்ந்த வகுப்பினரென்றும், பந்திபோஜனத்துக்குத் தகாதவர்களென்றும், அவர்கள் வேறு ஜாதியாராயிருக்கவேண்டுமென்றும், தெரியாதவர்களை பயமுறுத்தி வருவார்கள். இவர்கள் சாஸ்திரங்களின் உண்மையான கருத்தை அறியாதவர்கள். புநர்பூ லட்சணத்தை ஒரு ஸ்மிருதியிலிருந்தும்

அதன் தூஷணத்தை மற்றொரு ஸ்மிருதியிலிருந்தும் மனம்போன போக்கெல்லாம் பேசுபவர். ஒரு சிறு பெண்ணை இன்னொருக்குக் கொடுக்கலாமென்று மனதினு லும், வாக்கினுலும், நீர்வார்த்ததினுலும், தத்தமாய் விட்டவர்களின் புத்திரரும், விவாக காலங்களில் மங்கல ஸ்தானமட்டுமாகி மணவாளன் இறந்துபோய், வேறொரு வனை மணம் புரிந்து அவளுக்குப் பிறந்த புத்திரர்களும், "புநர்பு"களென்றும் "பௌனர்பவபுத்திர"ராவாரென் றும் சமபோஜன பந்திக்கு தகுதியற்றவர்களேன் றல் உலகத்தில் யார்தான் தோஷமற்றவர்கள் ஆவார். இக் கேள்விக்கு சமாதானமே வேண்டியதில்லை. காப்பிக்கடை களும் போஜன சாலைகளும் பதிலளிக்கும் கலியுக தர்ம கர்த்தாவாகிய பராசரர் "நஷ்டம்ருதே" வசனத்தில் ஸ்திரீகளின் புநர்விவாகத்தை விதித்து பௌநர்பவ' புத் திரர்களைப் பற்றி எங்கும் சொல்லாததால் இக்கலியுகத் தில் இவ்விவகாரத்துக்கே இடமில்லை. விதவையை மணம் புரிந்த அர்ஜுனனின் புத்திரன் ஔரசாக வே இருந்தானென்பதே போதுமான அத்தாட்சி யாகும். விபசாரவழியிற் பிறந்த புத்திரனும், ஈன்ற தாயும், புநர்பூகளென்று கருதப்படலாமேயொழிய கைம்பெண்களாயினும் சாஸ்திரோக்தமாய் புநர் விவா கம் செய்துகொண்டு அவர்களுககுப் பிறந்த பிள்ளைகள் ஒருநாளும் தூஷணைக்குட்பட்ட புநர்பூ மக்களாக மாட்டார்கள். ஆகையால்தான் நம் துரைத்தனத்தாரும் சமமான தாயபாகத்தை விதித்திருக்கின்றார்கள். இவ்வள வோடு விடைபெற்றுக்கொள்ளுகிறேன். அதிக விவ ரங்களை கேட்க விரும்புவோர், பண்டித ஈசுவர சந்திர வித்யாசாகரும், ராய்பகதூர் வீரேசலிங்கம் பந்துலு அவர்களும் திருவிதாங்கோடு வக்கீல் சேஷய்யங்கார்

அவர்களும் எழுதியுள்ள சாஸ்திரங்களைப் படித்து சகல சந்தேகங்களும் தெரிந்துகொள்ளலாம்.

மேற்சொன்ன வண்ணம் ஈசுவரன் நமக்கருளியிருக்கும் ஞானபலத்தாலும், வேத சாஸ்திர புராணங்களாலும், கைம்மையர்களின் புநர் விவாகம் அங்கீகரிக்கத்தக்கதென்று எல்லோரும் தெரிந்துகொண்டிருக்கலாம். ஆனால் சாஸ்திரங்களுக்கு, தமக்கிஷ்டம் நேர்ந்தபடி, யுக்திக்கும் அநுபவத்துக்கும், பொருந்தாத பொருள் கூறும் மதாசாரிகளும் பண்டிதர்களும் அநேகம் பேரிருக்கலாம். அநேக ஆக்ஷேபனைகளைச் சொல்லலாம். இப்படிப் பேசுவோர் உலக ஞாயமற்றவர்கள் ஆவார். இவ்வுலகத்தில் என்னென்ன தேசங்கள், என்னென்ன சமுத்திரங்களிருக்கின்றனவென்றும், முக்கியமான மதங்களெவையென்றும் அவைகளின் ஆசாரமின்னதென்றும் தெரிந்துகொள்ளாதவர்கள்.

நாம் அநுஷ்டித்துவரும் துராசாரத்தால் நம்மவர்களில் 2½ கோடிக்கு மேற்பட்ட விதவைகள் இருக்கின்றனரே! இவர்களெல்லோருக்கும் புநர் விவாகங்கள் செய்து வைத்திருப்போமானல் நம்மவர் ஜனசங்கியை குறைந்து ஈனதெசையை யடைந்திராதேயென்று எந்நாளும் நினையாதவர்கள் இந்த துராசாரத்தால் நம்மவரின் ஜனசங்கியை குறைந்துகொண்டு போவதையும், இதர மதஸ்தர் விருத்தி யடைகிறதையும் கவனியாதவர்கள் தர்ம சாஸ்திரியாராகிய மநு விதித்தவண்ணம் காலப் போக்கை யநுசரித்து நம்மவரின் சுகத்துக்கேற்பட்ட மாறுதல்கள் செய்துகொண்டு போகவேண்டுமென்ற எண்ணமும், ஞானதிருஷ்டியுமில்லாதவர்கள், துராபிமானிகள் புக

ழும்படி சாஸ்திரங்களுக்கும் யுக்திக்கும் அநுபவத்திற்கும் பொருந்தாத விபரீத அர்த்தங்களைக் கற்பனையாய்ச் சொல்லுவார்கள். புதுவிதிகளைச்செய்து பழைய ஏட்டோடு சேர்த்துவிடுவார்கள். தம் விவாதத்திற்குப் பிரதிகூலமாயிருக்கப்பட்ட விதிகளை அப்புறப்படுத்திவிடுவார்கள். காலத்திற்குத் தக்கவாறு தருமங்களை விவேகித்துக்கொண்டு போவதை விட்டு, தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள்தானென்று பிடிவாதமாய்ப் பேசுவார்கள். தூங்குகிறவர்களை யெழுப்ப முடியுமே தவிர, விழித்துக்கொண்டு தூங்குகிறவர்களாய்ப்பாசாங்கு செய்யுமவர்களை யெழுப்ப முடியாதாகையால், இலௌகீக ஞான சூனியர்களான துரபிமான பண்டிதர்களின் ஆக்ஷேபனைகளைப் பொருட்படுத்தாமல் நாம் முன்னடையும் மார்க்கத்தைச் செய்யவேண்டும்.

(ii) இரண்டாவது கேள்வி:—இத்தீய வழக்கத்திற்கு முதற்காரணமேது?'' என்பதற்கு விடை.

துவாபரயுகம் முடியும்வரையில், ஸ்திரீகளின் புநர்விவாகம் நடந்து வந்ததென்பதற்கு அர்ஜ்ஜுனன் விதவைஸ்திரியான ''யுலூபி'' என்பவளை விவாகம் செய்துகொண்டு ஐராவதனென்ற புத்திரனைப் பெற்றதே திருஷ்டாந்தமாகும். துவாபரம் முடியும் வரையில் நடந்த விவாகங்கள் கலியுகத்தில் நின்று போவதற்குப் போதுமான கஷ்டம் தேசத்திற்கு என்ன உண்டாயிற்றென்று விசாரிக்குமளவில், அதற்கு மகா பாரதயுத்தமே காரணமாய்த் தோன்றுகின்றது. இந்த யுத்தம் நடந்தகாலத்தில் இவ்விந்து தேசத்தின் அரசர்களெல்லோரும் தங்களுடைய சேனைகளுடன் ஏதோ ஒரு கக்ஷியைச்சேர்ந்து யுத்தம் செய்தார்களென்றும், பதினெட்டு

அக்ரோணி சைன்யங்கள் நாசமடைந்தனவென்றும் பாரதம் வாசித்த எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. கௌரவர்களுடைய கக்ஷியில் சேனாதிபதிகளாயிருந்த துரோணர், கிருபர், அஸ்வத்தாமா முதலானவர்கள் சண்டை செய்திருப்பதால் இரு கக்ஷியிலும் அநேக பிராமணர்களும் இருந்தார்களென்றும், யுத்தம் செய்த வர்கள் பாலியரும் கிழவர்களும் தவிர, நற்பிராயத்தோடு கூடியவரே இலக்ஷக்கணக்காய் மடிந்தார்களென்றும் தெரிகிறது. புருஷர்களெல்லோரும் யுத்தத்தில் இறந்த படியால் இத்தேசத்தில் அக்காலத்தில் புருஷ சங்கியை குறைவு பட்டுப்போயும், விதவை ஸ்திரீகளும் அதிக மாய் விட்டார்களென்பதற்குஞ் சந்தேகமில்லை. இந்த தேச உபத்திரவத்திற்குத்தக்க பரிகாரம் ஏற்படுத்த வேண்டிய அவசிய மேற்பட்டதால், வேதசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த பெரியாரனைவரும் சபைகூடி ஆலோசித் துப் புருஷப் பிரஜைகளைக் காப்பாற்றும்பொருட்டு, பிர யாணத்தில் அபாயத்தை விளைக்கக்கூடிய சமுத்திர யாத்திரையை நிறுத்தியும், கிரகஸ்தாஸ்ரமமென்கிற இல்லற வாழ்க்கை முடிந்த பின்னர் ஆதிகால இந்துக்கள் ஆரண்யங்களுக்குப் போய் வாசம்செய்து அநுஷ்டித்து வந்த சந்நியாசி ஆஸ்ரம நிலைமையையும் நிறுத்திய தோடு சிறிதுகாலமாகிலும் விவாகசுகத்தை அநுபவித்த விதவைகளின் விவாகத்தை நிறுத்தியும், கன்னிகை களுக்கு மட்டும் விவாகம் நடத்தவேண்டுமென்றும் விதித்துக் கன்னியாஸ்திரீகளின் இரக்ஷணம் பண்ணி னார்கள். இப்பேர்ப்பட்ட ஏற்பாட்டை அப்போது செய்யாமலிருந்தால், புருஷர்கள் பொதுவாய்த் தமக்கு உடன் பயன் கொடுக்கும் விதவைகளை மட்டும் விவாகம் செய்துகொள்வார்களாகையாலும், எப்போதோ ஒரு

காலத்தில் குடித்தனத்திற்கு உதவக்கூடிய இளம் கன்னிகைகளை மணம் புரிய இஷ்டப்பட மாட்டார்களாகையாலும், பரிசுத்த நிலைமை வாய்ந்த தோஷமற்ற கன்னிகைகளுக்கு விவாகமாகாமல் விபசார தோஷம் உண்டாகுமாகையாலும், இந்தக் கஷ்டத்தை நிவர்த்தி செய்வதற்காகச் சிறிது காலமாவது சுகப்பட்டு ஆறினவர்கள் விபசாரத்தில் இறங்காமலிருக்கக் கூடுமாகையாலும், அவ்விதவைகளின் விவாகத்தைநிறுத்திக் கன்னிகைகளுக்கும் வாலிபர்களுக்கும் பெரியார் விவாகங்களை ஏற்பாடு செய்ய நேர்ந்தது.

விபசாரதோஷம் பெரும்பாவமானதென்று சாஸ்திரங்கள் வற்புறுத்துவதால், அப்பாவத்தைத் தடுக்கும் பொருட்டு, கணவன் இறந்த பின்னும் விபசாரம் செய்யாமல் பரிசுத்தமாயிருக்கும் கைம்மையர்கள் தங்கள் பர்த்தாக்களின் லோகத்தை அடைவர்களென்றும் விதித்தார்களென்பது திண்ணம். அக்காலத்தில் இதைவிட வேறு எது ஏற்பாடு செய்யக்கூடியதிருந்தது. கொஞ்ச காலமாகிலும் சுகத்தை அனுபவித்த 30 வயதுள்ள ஒரு பெண்ணும், 12 வயதுள்ள ஒரு கன்னிகையுமிருந்து விவாகம் செய்துகொள்ளப் புருஷன் ஒருவன் மட்டும் கிடைத்தால், விவேகியாயிருக்கப்பட்ட ஒரு பெரியார் வயது முதிர்ந்தவளை நிறுத்திக்கொண்டு கன்னிகைக்கு விவாகம் செய்து வைக்காமலிருப்பாரா?

அக்காலத்துப் பெரியார் எவ்விதத்தில் புருஷர்கள் நம் தேசத்தை விட்டுப் போகாமலிருப்பரோ, வீணாகாமல் எவ்விதமிருந்தால் இல்வாழ்க்கைக்கு வருவாரோ, அக்காலத்துக்குத்தக்கபடி பிரயத்தனங்களையும், கட்டுப்பாடுகளையும் செய்தனர். அக்காலத்தில் அக்கட்டுப்

பாடுகள் நியாயமாகத்தான்ஏற்படுத்தப்பட்டன. ஆகிலும் இந்தக் கட்டுப்பாட்டுக் கிசையாமல் பூர்வ அநுஷ்டான மே தகுதியானதென்று நினைத்து, பூனு முதலானவிடங் களில் சில ஜாதியாரும், ஆந்திர தேசத்திய யாதவரும் மற்றும் அநேக தென் ஜில்லாக்களிலுள்ள குரும்பர், கள்ளர், மறவர் முதலான வகுப்பினரும், புநர் விவாகம் செய்துகொண்டு சுகமடைந்து வருவதை நாம் பிரத்தி யட்சமாய்ப் பார்க்கிறோமல்லவா? இதனால் பூர்வகாலங் களில் இவ்விந்து தேசத்தில் கைமையர்களுக்கு மறு மணம்செய்வது ஆசாரமாயிருந்ததென்பதற்குப் பிரத்தி யட்சப்பிரமாணமாகும் என்பதை எவரும் கவனிக் கத்தக்கது.

இக்காலத்தில் மேற்சொன்ன தேச உபத்திரவங்க ளில்லாமற் போய்விட்டபடியாலும், விதவைகளுள் புநர் விவாகம் அற்றதால் முதல் அத்தியாயத்தில் விவரித்துச் சொல்லிய வண்ணம் அநேக அனர்த்தங்களும். மானக் கேடுகளும், சிசுகத்தி முதலான கொடிய பாவங்களும் விஸ்தாரமாய் நடக்கிறபடியாலும், இக்காலத்தில் சமுத் திர யாத்திரை, சந்நியாசம், முதலிய வழக்கங்களைத் தழுவி வருவதோடு விவேகிகள் புநர் விவாகங்களும் செய்துவருகிறபடியால் நாமும் அவ்வண்ணமே செய்து நம் ஆதிகால வாழ்வின்பெருக்கை நிலைநாட்டவேண்டும்.

பாருங்கள்! சென்ற சில ஆண்டுகளுக்கு முன் நடந்த மகா யுத்தத்தில், புருஷ சங்கியை குறைய இங்கிலாந்தில் யுத்த களத்தில் நிற்கும் புருஷர்களின் இல்லிலுள்ள அவர்களின் ஸ்திரீகள் அக்காலங்களில் கர்ப்பிணிகளாகி, குழந்தைகள் ஈன்றெடுத்தால் அக் குழந்தைகள் தங்கள் தங்கள் கணவர்களுக்குப் பிறந்த

உரிமையையுடையதே என்ற (Naturalisation Act) என்கிற சுதந்திர உரிமைச் சட்டத்தை ஏற்படுத்தவில்லையா? இது அறிவீனமாகுமா? இதுவிஷய ஞானமாகி இலௌகிக தருமத்திற்கு எடுத்ததல்லவா? இப்படி ஏற்படுத்தியதால் எவ்வளவு கஷ்ட நஷ்ட நிஷ்டூரங்களைப் போக்கி யுள்ளார்களென்பதை ஏ புத்திமான்களே!

நீவிர் இங்கு அறியற்பாலது. அப்படியுமல்ல நான் இதுவரையிலும் சொன்னது, இஷ்டப்பட்டவர்களுக்கு வேதோக்தமான புநர் விவாகந்தானே. வியபிசாரம் வெறுக்கத்தக்கதல்லவா?

(iii) வெகுகாலமாய் அநுஷ்டித்து வந்த இவ்வாசாரத்தை மாற்றிக்கொள்ளலாமா? என்னும் மூன்றும் கேள்விக்கு உத்தரம்.

శ్లో॥ పరిత్యజేద్ధర్మ కామౌయౌ స్యాతాం ధర్మ వర్జితౌ।
ధర్మం చాప్యసుఖోదర్కం లోకవిక్రుష్టమేవచ॥

பரித்யஜே தர்மகாமௌயௌ ஸ்யாதாம் தர்மவர்ஜிதௌ
தர்மம் சாப்யஸுகோதர்க்கம் லோக விக்ருஷ்டமேவச॥

என்ற சுலோகத்தில் மனுவானவர் இவ்வுலகத்துக்கு சுகமற்ற தருமங்களை விட்டுவிடலாமென்றும், அவ்வக்காலத்திற்கு அநுகூலமாயிருக்கும் தருமங்களை ஆசரிக்கலாமென்றும் கட்டளை யிட்டிருப்பதால், இக்காலத்து நிலைமையை அநுசரித்து நாம் தக்க ஏற்பாடுகளைச் செய்துகொள்ளலாமென்று பண்டிதர் ஈஸ்வர சந்திர வித்தியாசாகரரும், இராஜமகேந்திரவரம் வீரேசலிங்க பந்துலு அவர்களும், வெகு பிரயாசைப்பட்டு ஜனங்களுக்கு சாஸ்திரத்தைத் தெளியக் காட்டி அவர்கள் கண்களை விழிக்கச்செய்ததோடு, ஸ்திரீ புநர் விவாகங்களையும் செய்து

வைத்தார்கள். அவர்கள் வழியை அனுசரித்து சபைகள் ஏற்பட்டு இப்போது ஆயிரக்கணக்கான விதவை மக்களின் புநர் விவாகங்கள் நடந்தேறி வருகிறது. தவிர தாயபாக விஷயத்தைப் பற்றியும், விதவைகளின் புநர் விவாகம் சாஸ்திர சம்மதமானதென்றும், பிரதம விவாக மந்திரங்களே இரண்டாவது விவாகத்துக்கு உபயோகப் படுத்தலாமென்கிற விஷயத்தைப்பற்றியும், நம்முடைய கவர்மெண்டார் 1856-ம் ஹு 15-வது சட்டப்படி விதித்திருப்பதால், நம்மவரின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கும், நமக்குக்கடவுள் அநுக்கிரகித்திருக்கும் ஞானத்தை உபயோகப்படுத்தி நம் ஜன சமூகத்தின் முன்னேற்றத்தைக் கருதி தோஷமற்றதும் சாஸ்திர சம்மதமான விதவை ஸ்திரீகளின் புநர் விவாகத்தை நம் இளங் கைம்மை மக்களுக்குச் செய்துவைக்கவேண்டுமென்று நான் தாழ்மையாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேற்கூறிய வண்ணம் ஸ்திரீ புநர் விவாகத்தை சகலதர்ம சாஸ்திரங்களும் அங்கீகரிப்பதால், கெட்டுப்போன தர்மங்களை மறுபடியும் நிலைநாட்ட வேண்டுமென்றே யானிதுவரையில் சொன்னதெல்லாமென்றும், வியபசாரம் தடுக்கத்தக்கதென்றும் எல்லோரும் ஒப்புக்கொள்ளத்தக்கது.

---

# முடிவுரை.

பண்டித சிரோன்மணிகளுக்கும் மடாதிபதிகளுக்கும் அரசியலியக்கத் தலைவர்களுக்கும் அடியேன் நமஸ்கரித்துத் தாழ்மையாய்ச் செய்துகொள்ளும் விஞ்ஞாபனம்:—

உலகத்தின் முன்னேற்றத்திற்காக அவ்வக்காலங்களை யநுசரித்து உலக ரக்ஷணார்த்தமாய்த் தருமங்களை விவேகித்துக்கொண்டு போகவேண்டுமென்று மநுவே விதித்திருப்பதாலும், நம்முடைய இந்து தேசத்தில் 2½ கோடிக்கு மேற்பட்ட ஸ்திரீகள் விதவைகளாய்ப் புநர் விவாகமில்லாமல் காம இச்சையால் பெரும்பாலோர் ஜாதிமத பிரதிஷ்டர்களாய் விடுவதாலும், பிரம்மக்ஷத்திரிய, வைசிய, சூத்திர ஜாதிகளில் ஒவ்வொரு குடும்பத்தாரும் சந்தானக்குறைவால் நாளடைவில்க்ஷீணித்துப் போய்க் கொண்டிருப்பதாலும், இந்து மதஸ்தர்களின் ஜனசங்கியை குறைந்துகொண்டு போவதால், இந்துமதமே மறைந்து போகுங்காலம் நெருங்கி விடுமாகையாலும் சாஸ்திரங்களுக்குப் பிரத்தியக்ஷவிரோதமாய்த் துர்வியாபாரங்கள் நடந்துகொண்டிருக்கும்போது கண்களால் பார்த்துக்கொண்டும், பார்த்தும் பேசாமலிருக்கும் நீங்கள், இந்த அனாத பாவியவிதவை மக்களின் விஷயத்தில் மட்டும் உங்கள் பண்டிதத் திறமையைக் காட்டித் துரபிமானிகள் புகழும்படி சாஸ்திரங்களுக்கு யுக்தி அனுபவங்களுக்குப் பொருந்தாத அர்த்தங்களைக்கற்பித்து, இளங்கைம்பெண்களின் சுகத்திற்கு இடையூறுகள் உண்டாக்கி அதனால் அவர்களை அநேக துஷ்கருமங்களில் இறங்க உங்கள் வித்வ சக்தியை உபயோகப்படுத்தலாமா? ஒரு சிறிய குருவியின்மீது பிரம்மாஸ்த்திரத்தை

எய்ததுபோல, எத்தனை காலமோ கஷ்டப்பட்டுப்படித்த வித்தை முழுவதும் புருஷனையிழந்த திக்கற்ற விதவைப் பெண்மக்களின்மீது தானு உபயோகிக்கவேண்டும்? வித்தையின் பலத்தால் திக்கற்ற விதவைப் பெண்களை ஈன ஸ்திதியிலிருந்து நிவர்த்திசெய்து அவர்களைக் காப்பாற்றும் பொருட்டு உங்கள் வித்வ சக்தியை உபயோகிக்கலாகாதா? வியாசர், பராசரர், ஜமதக்நி, பரத்துவாஜர், விசுவாமித்திரர், அத்திரி, கௌதமர், வசிஷ்டர், காசியபர், அகஸ்தியர் முதலான உத்தம ரிஷிகளின் சந்ததியாராகிய நீங்கள் உங்கள் மக்களையும் சகோதரிகளையும் அநேக நூற்றுண்டுகளாகச்சிறையில் வைத்திருப்பது போதாதா? உங்கள் அடியை ஒற்றி, உங்களுடன் ஒன்றி வாழ்ந்துவரும் க்ஷத்திரிய, வைசிய, சூத்திர ஜாதியாராகிய எங்களுடைய சகோதரிகளும் மக்களும் உங்கள் சகோதரிகளைப் பின்பற்றியே சிறைவாசம் செய்து வருகிறுர்களே; அவர்கள்மீதும் உங்கள் தயையைப் பாராட்டலாகாதா ? பெண் என்றுல் பேயுமிரங்குமே! உங்கள் மனம்மட்டும் உருகவில்லையே! "யானையானது தன்தலைமீது தானே மண்ணை இறைத்துக் கொள்வதைப்போல மகாபாரதப்போரால் உண்டானதேசோபத்திரவத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அக்காலசாந்தியாய்ச் செய்த கட்டுப்பாட்டைமறந்து அதைமாற்றுவதைவிட்டு. பிற்காலத்துப்பெரியார் வேத விரோதமான தங்கள் அனுஷ்டானத்தைக் கண்டு பயந்து, விவேகத்தை இழந்து, அதை ஸ்திரப்படுத்தும் பெருட்டு பழைய ஏடுகளை யப்புறப் படுத்தியும், புதிய ஏடுகளைச் சேர்த்தும் தங்களைத்தாங்களே ஏமாற்றிக்கொண்டார்களே! இந்த அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்வதற்கு உங்கள் வித்வ சக்தியை உபயோகிக்கலாகாதா? சாத்விககுணத்தோடு வாழும் நம்மவரைக்

காப்பாற்றும் பொருட்டு ஈசுவர அனுக்கிரகத்தால் சகல சாம்பிராஜ்ய பதவியை யடைந்து, நம்மைக்கருணையோடு ஆளும் நமது துரைத்தனத்தார், நம்முடைய சமூக அபிவிருத்தியின் பொருட்டு நம் விதவை மக்கள் உடன் கட்டையேறும் கொடிய வழக்கத்தை மாற்றி, நம் வேதங்களை அநுசரித்தே அனாத விதவைப் பெண்மக்களின் மறு மணத்தைச்செய்ய நமக்கருளிய 1856-ம் ஜுலை த்திய 15-வது சட்டத்தை நாம் நாளது வரை திரஸ்காரம் செய்து நம் வீட்டு மக்களும், சகோதரிகளும், சுகித்திருக்கக்கூடிய சுயராஜ்யம் கொடுக்க மறுக்கும் நாம் தானா நம்தேசத்திற்கு சுயராஜ்யம் கேட்கவும் பெறவும் தகுதியுள்ளவர்களாவோம்.

శ్లో॥ యత్పాపం బ్రహ్మహత్యాయాం ద్విగుణం గర్భ పాతనే।
ప్రాయశ్చిత్తం నతస్యాస్తి తస్యాస్త్యాగో విధీయతే॥

யத்பாபம் பிரம்ஹ ஹத்யாயாம் த்விகுணம் கர்ப்பபாதனே
பிராயஸ் சித்தம் நதஸ்யாஸ்தி தஸ்யாஸ்த்யாகோ விதீயதே

என்ற பராசர மகரிஷியின் வசனத்தின்படி பிரம்மகத்தியைவிடக் கோர பாதகமானதும், பிராயச்சித்தமும் கிடையாத கர்ப்ப சிராவங்களுக்கும், சிசுகத்தி முதலான பாவங்களையும்தடுக்க தர்மசாஸ்திரங்கள் சம்மதிக்கவில்லையென்றும், கருணாகரனாகிய ஈசுவரன் வேதங்களிலருளிய புநர் விவாகக் கட்டளைகளை பிரயோஜனமற்றதாய்ச்செய்கின்றனவென்றும் உங்களுக்குத்தோன்றினால் அப்பேர்ப்பட்ட அக்கிரம,கோடிய, அதர்மசாஸ்திரங்களைத் தள்ளுபடிசெய்து மநு சொல்லியவண்ணம் வெகுஜனோபகாரமாயிருக்கும் உங்கள் விதவைப் பெண் மக்களின் புநர் விவாகத்தை நீங்கள் நடத்திவைத்தும், நாடும் நகரமும் நன்குணரும்படி ஸ்திரீ புருஷ வித்தியாச ஆசா

ரத்தைத் தவிர்த்து ஸ்திரீகள் இன்புற்று வாழவும், மானிடரனைவரும் சமத்துவ உரிமையை யடைந்து, சுகித்திருக்கும் வண்ணமும் பிரசாரம்செய்து அவர்கள் உங்களைப் பின் பற்றும்படிச் செய்து உங்கள் வச மாக்குவீராகில், இந்தியா உலக உத்தாரணம்செய்த புண் ணியத்துக்குப் பாத்திரமாவீர்களென்று உலகமனைத்தும் உங்களைப்போற்றும். அவர்களும் உங்களுடன் ஒத்து வாழ்வார்கள். எல்லோரும் விரும்பும் ஸ்வராஜ்யமும் தானே வந்துவிடும்.

நிறைந்த கருணையுடையவரும் ஏழைகளின் பந்து வாகிய பகவான், நீங்கள் உபகார சிந்தனையுடையவர்க ளாய் ஆகும்படி அநுக்கிரகம் பண்ணுவாராக! பரமதயா ளுவான சர்வேசுரன் உங்களிருதயத்தில் பிரவேசித்து அநாதையான விதவைமக்களின் குறைகளை நீங்களாலோ சித்து அவர்களின் துயரத்தையும் சிறைவாசத்தையும் போக்கி சீக்கிரத்திலவர்களைச்சுகவழி அடையச்செய்வ தற்கு உங்களுக்குக் கருணையை உண்டாக்குவாராக

நிறைந்த கருணையும் ப்ராணவஸ்வரூபியாகிய தர்மவேத மூர்த்தியே, சமயகோடிகளுக்கெல்லாம் அருளிய உனது கட்டளைகளே, எனக்கு சரண மாகக்கடவது. ஓம். சுபம்.



ஜனானுகூல பிரஸ், திருச்சி.